# ஆராய்ச்சி முறையியல் ஓர் அறிமுகம்

## Research Methodology : An Introduction


மு. பொன்னுசாமி, எம். ஏ., எம். பில்.

ஆய்வாளர், தமிழ்த்துறை,

சென்னைப் பல்கலைக் கழகம்



கலா பதிப்பகம்

கோயம்புத்தூர்.

முதற்பதிப்பு: 1979.
இரண்டாம் பதிப்பு: 1982
கலா பதிப்பக வெளியீடு


விலை ரூ. 12-00.

*RESEARCH METHODOLOGY :*
*AN INTRODUCTION*

*By*
*M. Ponnuswamy M. A., M. Phil.,*
*Research Scholar*
*Department of Tamil,*
*University of Madras.*

நூல் கிடைக்கும் இடங்கள் :

பாரி நிலையம்
184, பிரகாசம் சாலை (பிராட்வே)
சென்னை—600 001

மீனாட்சி புத்தக நிலையம்
60, மேலக் கோபுர வாசல்,
மதுரை—1
கிளை : 228 திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை,
சென்னை—600 005

ஜீவன் பிரஸ் சென்னை—5

# அணிந்துரை

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்,
எம். ஏ., எம். லிட்., பிஎச். டி.
தமிழ்ப் பேராசிரியர்—துறைத் தலைவர்
சென்னைப் பல்கலைக் கழகம்,

உயர் கல்வியில் நாட்டம் மிகுந்து வருகின்ற காலம் இது. மாணவர்கள் ஆராய்ச்சிக் கடலில் மூழ்கி நன்முத்துக்களைத் திரட்டிக் கொணர்ந்து தமிழன்னையை நாளும் அணி செய்து வருகின்றனர். ஆராய்ச்சி நுண்மையும் விரிவும் அடைய ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட வேண்டிய உத்திகள் ஆராய்ச்சித் துறையில் ஈடுபடுபவர்க்கு நன்கு தெரிந்திருத்தல் வேண்டும். மேலை நாடுகளில் நாளும் ஆராய்ச்சி நெறிமுறைகள் விரிவும் விளக்கமும் நுண்மையும் சிறப்பும் பெற்று வருகின்றன. விடுதலை பெற்ற நம் திருநாட்டிலும் கல்விக்கு முக்கியமும், உயர்கல்விக்குத் தனிக்கவனமும் காட்டப்பட்டு வருகின்றன.

'ஆராய்ச்சி முறையில்—ஓர் அறிமுகம்' என்னும் சீரிய இந்நூல் காலத்தின் தேவைக்கு இன்றியமையாத இனிய நூலாகும். இந்நூலில் 'ஆராய்ச்சியின் வளர்ச்சிப் படிகள்' என்னும் முதல் இயல், ஆராய்ச்சிக்குரிய தலைப்பினைத் தேர்வு செய்வது முதல் வாய்மொழித் தேர்வு வரை அமைந்துள்ள ஒவ்வொரு நிலையும் விரிவாகவும் விளக்கமாகவும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு நிலையிலும் ஆய்வாளர் மேற்கொள்ள வேண்டிய நெறிமுறைகள் எளிய முறையில் இனிய வகையில் கிளத்துரைக்கப்பட்டுள்ளன. ஆய்வேட்டின் அமைப்புக் குறித்தும் நூலாசிரியர் தம் நுண்மாண் நுழைபுலம் விளங்க எடுத்துரைத்துள்ளார்.

'ஆராய்ச்சியின் வளர்ச்சிப் படிகள்' என்னும் அடுத்த கட்டுரை, ஆய்வுத் தலைப்பினை எவ்வாறு தேர்ந்தெடுப்பது என்னும் அடிப்படைச் சிக்கலை அழகுற ஆராய்கின்றது. தலைப்பைத் தேர்ந்தெடுக்கும் முறைகளையும், அவ்வாறு தேர்ந்தெடுக்கும் பொழுது எவ்வெவ்வாறெல்லாம் சிந்தனை

செய்து தேர்ந்தெடுப்பதென்னும் முறைகளையும் ஆசிரியர் சிறப்பாக விளக்கியுள்ளார். ஒருவாறு தலைப்பைத் தேர்ந்தெடுத்து முடித்த பிறகு, செயல் துணை நூற்பட்டியல் தயாரிக்கும் நிலை, தகவல் குறிப்புகளைச் சேகரிக்கும் நிலை ஆகிய அனைத்தையும் பற்றி ஆசிரியர் அலசுகின்றார். துணை நூற்பட்டி அட்டைகள், குறிப்பட்டைகள் இவற்றைப் பயன் படுத்தும் வகையும் மாதிரிகளும் தரப்பட்டுள்ளன.

'ஆய்வுமூல உண்மைக் கூறுகள்' என்னும் கட்டுரையில் மூல உண்மைக் கூறுகளின் வகைகள் எடுத்துக் காட்டப்படு கின்றன. தேவையான விளக்கங்களோடு எடுத்துக் காட்டு களும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

மூன்றாவது கட்டுரை 'கள ஆய்வும் மூல உண்மைக் கூறுகள் சேகரித்தலும்' என்னுந் தலைப்பு கொண்டது இக் கட்டுரையில் கள ஆய்வின் நோக்கமும் இன்றியமை யாமையும் எடுத்துரைக்கப்படுகின்றன களஆய்வின் வகை களாக பேட்டி முறை மாதிரி அமைத்தல், உற்றாய்வு முறை, வினாவரிசை முறை முதலியன குறிப்பிடப் பெறுகின்றன. இவை ஒவ்வொன்றிலும் எவ்வாறெல்லாம் மூல உண்மைக் கூறுகள் சேகரிக்கப்படுகின்றன. அவற்றின் சிறப்புகள் என்ன முதலான செய்திகள் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. கள ஆய்வின் பயன்களும் சுட்டப்பட்டுள்ளன

'உண்மைக் கூறு பகுத்தல்' என்னும் அடுத்த கட்டுரை மூல உண்மைக் கூறுகளைத் தலைப்பிற்கேற்ப வகை தொகை செய்தலையும், பகுப்பாய்வு செய்து காண்டலையும் விளக்கி, நிற்கிறது பகுப்பாய்வு நிகழ்த்தும்பொழுது ஆய்வாளர் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகள் தரப்பட்டுள்ளன.

அடுத்த கட்டுரை 'ஆய்வேட்டின் அமைப்பு' குறித்த தாகும். ஆய்வேடு சிறப்படைய அஃது எவ்வெவ்வகையில் அமைந்திருக்க வேண்டும் என்பதனை இக்கட்டுரை தெள்ளத் தெளிய எடுத்து மொழிகின்றது.

'துணை நூற்பட்டியல்' என்னும் அடுத்த கட்டுரை அமைவிடம், அமைக்கும் முறை, வகைப்படுத்தும் முறை, துணைநூற்பட்டியலின் வகைகள் இவற்றை எடுத்துரைக் கின்றது. நூலை உருவாக்குவது எவ்வாறு? கட்டுரைகளை அமைக்கும் வகையாது? ஆய்வாளருக்கு ஏற்படும் ஐயப்பாடு களைக் களையும் முறைகள் யாவை? ஆகிய அனைத்தையும் கூறி நிற்கிறது.

'சுருக்க விளக்கங்கள்' என்னும் கட்டுரையில் ஆங்கிலத்தில் பின்பற்றப்படும் சுருக்க விளக்கங்களுக்கேற்ற தமிழில் பின்பற்றப்பட வேண்டிய சுருக்க விளக்கங்கள் திறம்பட விளக்கப்பட்டுள்ளன.

'அடிக்குறிப்புகள்' என்ற தலைப்பில் அடிக்குறிப்புகள் அமைய வேண்டிய இடம், அவற்றிற்கு எண்கள் தருவது எவ்வாறு? அடிக்குறிப்பில் இடம்பெறும் குறுக்க விளக்கங்கள், அடிக்குறிப்பில் மேற்கோளைக் கையாளும் வகை, நூல், கட்டுரை அமைக்கும் முறை, ஆய்வாளருக்கு அடிக்குறிப்பு எழுதும்பொழுது ஏற்படும் ஐயங்களை அகற்றும் வகையில் உதாரணங்கள் ஆகிய அனைத்தும் இடம் பெறுகின்றன.

'மேற்கோள்கள்' என்ற கட்டுரை, மேற்கோள் தரப்படுவதன் நோக்கம், மேற்கோள்களின் வகைகள், மேற்கோள்களுக்கு எண்ணிடும் முறைகள், மேற்கோளில் சிறப்பாகப் பயன்படுத்தப்படும் குறுக்க விளக்கக் குறியீடுகள் பற்றிய விளக்கம், செய்யுள், உரைநடை, கடிதம் இவற்றை மேற்கோளில் எவ்வாறு ஆள்வது? மேற்கோளில் சுட்டுப் பெயர்கள், மேற்கோளில் விளக்கம், மேற்கோளுக்குள் விளக்கம் இவையனைத்தையும் விளக்கி நிற்கிறது.

'பின்னிணைப்புகள்' என்ற பகுதியில், பின்னிணைப்புகள் அமைய வேண்டிய இடம், பிரிவுகள், பயன்கள் முதலியன சுட்டப்படுகின்றன. அட்டவணைகளும் விளக்கப் படங்களும் ஆய்வேட்டில் அமைக்கும் வகை விளங்கக் கூறப்பட்டுள்ளது.

'ஆய்வேட்டின் நடை' எனப் பெயரிய கட்டுரை இனியதும் இன்றியமையாததுமான கட்டுரையாகும். தொடக்கத்தில் ஆய்வு நடை என்றால் என்ன? என்று ஒரு வினாவை எழுப்பிக் கொண்டு நூலாசிரியர் மேலைநாட்டு ஆசிரியர்கள் கருத்தினைத் தம் கருத்துக்களுக்கு அரண் சேர்க்கப் பயன்படுத்தியுள்ளார். தெளிவு, செறிவு, எளிமை இவை நடையில் அமைய வேண்டும். எழுத்துப்பிழை, தொடர்ப்பிழை, கருத்துப் பிழை, சந்திப்பிழை முதலானவை ஏற்படாமல், அவை கட்டுரையில் இடம் பெறாமல் எவ்வாறு காத்துக்கொள்வது என்பது எளிமையாக விளங்கவுரைக்கப்பட்டுள்ளது. பத்தி அமைத்தல், நிறுத்தக் குறியீடுகள் இடுதல் முதலியன பற்றியும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். கட்டுரை இறுதியில் ஆய்வு நடையில் தவிர்க்க வேண்டியனவும், பின்பற்ற வேண்டியனவும் கூறப்பட்டுள்ளன.

'ஆய்வுரை எழுதுதல்' என்னும் அடுத்த தலைப்பில், குறைந்த அளவு மூன்று படிகளாவது எழுதவேண்டும் என்று எடுத்துக் காட்டுகின்றார் ஆசிரியர். ஒவ்வொரு நிலையிலும் ஆய்வுரை செம்மையாக அடைய எழுதும் முறைகள், பின் பற்றப்பட வேண்டிய நெறிமுறைகள் கூறப்பட்டுள்ளன.

'தட்டெழுத்தும் கட்டமைப்பும்' என்னும் தலைப்பில் ஆய்வுரை சிறப்பாக அமைய தட்டெழுத்துச் செய்யும் முறை அமைய வேண்டிய அழகினைக் காட்டியுள்ளார். ஆய்வுரைத் தாள், ஓரப்பகுதிகள், இடைவெளி தலைப்புகள், தட்டெழுத்துப் படிகளைத் திருத்துதல், கட்டமைப்பின் அருமை இவற்றைப் புலப்படுத்தியுள்ளார்.

'வாய்மொழித் தேர்வு' என்ற பகுதியில் வாய்மொழித் தேர்வின் நோக்கங்கள் சுட்டப்படுகின்றன. வாயமொழித் தேர்விற்கு ஆய்வாளர் எவ்வாறெல்லாம் தம்மை ஆயத்தப் படுத்திக்கொள்ள வேண்டும் என்பன பற்றிய செய்திகள் விரிவாக உரைக்கப்படுகின்றன.

'இலக்கிய ஆய்வு நோக்குகள்' என்ற தலைப்பில் இலக்கியத்தை எவ்வெவ் நோக்குகளில் அணுகி நுணுகி ஆராயலாம் என்பது விளக்கபபடுகிறது. வண்ணனை, வரலாறு, உளவியல், தத்துவம சமுதாயம், மொழியியல் முதலிய நோக்குகளில் காணலாம் என்றும் கூறப் பட்டுள்ளது அறிவியல் ஆய்வு இலக்கியத்துறை ஆய்விற்கு இன்றியமையாதது என எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

இத் நூலாசிரியர் திரு. மு. பொன்னுசாமி. எம். ஏ., எம். பில். அவர்கள் எம். ஏ, எம். பில் தேர்வுகளில் முதல் வகுப்பும் முதல் நிலையும் பெற்றவர். அறிவாற்றலும் அடக்கமும் பண்பும் பயன்பாடும் மிக்கவும் நுணுகி ஆயும் உளத்தினர். கடுமையான உழைப்பாளி. இந நூலினை மிகவும் நல்ல முறையில் ஆய்வுலகம பயன்பெறும வகையில் சிறக்க எழுதியுள்ளார். காலத்திற்கேற்ற இத்தொண்டினைத் தமிழ் கூறு நல்லுலகம் ஏற்றுப் போற்றி ஆசிரியர் தம் கன்னி முயற்சிக்கு ஆதரவு நல்குவதாக! உண்மையும் உழைப்பும் அறிவும் திறனும் நிறைந்த திரு. மு. பொன்னுசாமி அவர்களின் தமிழ்த் தொண்டு நாளும் வளர்ந்து சிறப்பதாக. வாழ்த்துக்கள்.

காஞ்சிபுரம்
9-6-79

சி. பாலசுப்பிரமணியன்.

# முன்னுரை

ஆய்வின் அடிப்படையாக அமையும் ஆய்வு நெறிமுறைகளைப் பற்றி ஆராய்ச்சிப் படிப்பில் ஈடுபடும் ஆய்வாளர் ஒவ்வொருவரும் நன்கு அறிந்திருத்தல் வேண்டும். ஆய்வுக்குத் தலைப்புத் தேர்வு செய்வது முதல் ஆய்வுத் தொடர்பான வாய்மொழித் தேர்வு வரை ஆராய்ச்சியின் வளர்ச்சி நிலைகளை எடுத்துரைக்கும் ஒரு நூலைத் தமிழில் எழுத வேண்டும் என்ற ஆர்வம் என் உள்ளத்தில் கருக்கொண்டது ஒரு சில மாதங்களுக்கு முன்பு இன்று நூலாக உருவாகி வெளிவருகின்றது ஆய்வின் வளர்ச்சிப்படிகளின் ஒவ்வொரு படியிலும் ஆய்வாளரின் பங்கு—ஆற்றவேண்டிய பணி பெரிது. மிகப் பெரிது. ஆதலால் அவர்களுக்கெனச் சில நெறிமுறைகளை—கடைபபிடிக்க வேண்டிய நெறிமுறைகளை ஒவ்வொரு நிலையிலும் குறிப்பிட்டுள்ளேன். ஆய்வேட்டின் அமைப்பு, துணைநூற் பட்டியல், சுருக்க விளக்கங்கள், அடிக்குறிப்புகள், மேற்கோள்கள் போன்ற தலைப்புகளில் இடம்பெறும் செய்திகள் ஆய்வாளர்களுக்குப் பெரிதும் பயன்படுமென நம்புகின்றேன். தமிழ் கூறு நல்லுலகத்தில் இந்நூலுக்குச் சிறந்த வரவேற்பு இருக்குமென நினைக்கின்றேன்.

இந்நூலுக்கு அழகிய அணிந்துரையை மனமுவந்து நல்கிய பெருந்தகை தமிழ்த்துறைத் தலைவர்—பேராசிரியர் டாக்டர் சி பாலசுப்பிரமணியன் அவர்கட்கு என் உள்ளார்ந்த நன்றி என்றும் உரித்தாகும். இந்நூல் வெளிவருங்காறும் எனக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்த டாக்டர் மா. செல்வராசன் அவர்கட்கும், திரு வ. ஜெயதேவன் M A., அவர்கட்கும் அன்பான நன்றியைத் தெரிவிப்பது என் உள்ளக்கிடக்கை. குறிப்பிட்ட காலத்தில் நன்முறையில் இந்நூலை அச்சிட்டுதவிய ஜீவன் அச்சகத்தாருக்கு என் நன்றி.

சென்னை-600 005, மு. பொன்னுசாமி

# உள்ளுறை

# 1. ஆராய்ச்சியின் வளர்ச்சிப்படிகள்

## (Stages of Research)

மனிதன் தன் பகுத்தறிவு கொண்டு எப்பொருளையும் கூர்ந்து நோக்கி ஆராயும் பண்பினைப் பெற்றவன். ஒரு பொருள் தனக்குப் பயன்படுமா? பயன்படாதா? என்பதை அறியப் பல வழிகளிலும் அப்பொருளைப் பயன்படுத்திப் பார்த்து முடிவு செய்திருப்பான். பயன் படும் பொருளைக் கொண்டும், பயன்படாத பொருளை ஒதுக்கியும் வந்தமையை நோக்குங்கால், மனித மூளை வளர்ச்சியடைந்த ஞான்றே ஆராய்ச்சியும் தோன்றியது என்பது தெற்றெனப் புலப்படும். அன்று முதல் இன்றுவரை ஆராய்ச்சி பல துறைகளிலும் பெரும் வளர்ச்சி பெற்று வருகிறது.

ஆராய்ச்சி என்பது ஆய்வுச் சிக்கலை உள்ளடக்கிய தலைப்பைத் தேர்ந்து, அச்சிக்கலைத் தீர்வுகாண அவ் ஆய்வுத் தலைப்புத் தொடர்பான மூல உண்மைக் கூறுகளைச் சேகரித்து, கருதுகோள்களையும் அனுமானத்தையும் உருவாக்கி, அதன் அடிப்படையில் மூலஉண்மைக் கூறுகளைப் பகுப்பாய்வு செய்து, சிக்கலைத் தீர்வுகண்டு உண்மை காண்பதும், அல்லது புதிய ஒன்றைக் கண்டு பிடிப்பதும் உறுதிப்படுத்துவதும் ஆகும்.

உண்மை என்ற உயர்படியையே அனைத்துத்துறை ஆராய்ச்சிகளும் அடைகின்றன. டாக்டர் வ.சு.ப. குழந்தைசாமி அவர்கள் 'ஆய்தல் ஆராய்ச்சி ஆகிய சொற்கள், உண்மையை, மெய்மையை, அறிவதற்காகச் செய்யும் வினையைக் குறிப்பனவாகும். மெய்மையை அறியும் முயற்சிதான் ஆய்தல்' எனக் கூறுவது ஈண்டுக் கருதத்தக்கது. அறிவின் பயன் உண்

மையை—மெய்மையைக் காண்பதாகும் என்பதை வள்ளுவரும்,

**எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு.**
**எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு**

என்னும் இரு குறள்களில் குறிப்பிடுகின்றார்.

இன்று ஆராய்ச்சிக் கல்விக்காக, பல்கலைக் கழகங்கள் பெரும் ஊக்கமளிக்கின்றன; பல துறைகளிலும் ஆராய்ச்சிக் கல்வியை வளர்த்துவரும் பெரும் பணியை மேற்கொண்டுள்ளன. ஆய்வாளர் கல்விப் படிப்பின் உயர்படியபான ஆராய்ச்சிப் படிப்பில் பட்டங்கள் பெற வேண்டும் என்ற நோக்கத்தோடு, ஆய்வின் மூலம் உண்மை காண வேண்டும் அல்லது புதியனவற்றைக் கண்டு பிடிக்க வேண்டும் என்ற ஆர்வத்தோடு உழைக்க வேண்டும்.

## ஆய்வின் வளர்ச்சிப் படிகள்

பல்கலைக் கழகங்களுக்கு எம்.பில்., பிஎச்.டி., டி.லிட். போன்ற ஆய்வுப் பட்டங்களுக்காக ஆய்வாளர்கள் ஆய்வுரைகளை அளிப்பது வழக்கம். அறிவியல், இலக்கியம் தொடர்பான ஆய்வுகளாயினும், பிறவகை ஆய்வுகளாயினும் பொதுவாக அனைத்து ஆய்வுகளுக்குமான ஆராய்ச்சியின் வளர்ச்சிப் படிகள்.

1. ஆய்வுப்பாடத்தைத் தேர்வு செய்தல் (choosing a subject). ஆய்வாளர் எத்துறையில ஆய்வு நிகழ்தத ஆர்வமுடையவராக இருக்கின்றாரோ அததுறைத் தொடர்பான ஆய்வுப் பாடத்தைத் தேர்ந்தெடுப்பது ஆய்வின் முதற்படியாகும்.

2. தலைப்புத் தேர்ந்தெடுத்தல் (choosing a Topic) தலைப்புத் தொடர்பான தொடக்க காலப்படிப்பு ஆயவுத் தலைப்பை உறுதிப்படுத்தத் தேவைப் படுகிறது. ஆய்வாளர் தம் மேற்பார்வை யாளரோடு கலந்தாலோசித்து ஆய்வுக்குப் பொருத்தமான தலைப்பைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

3. ஆய்வுத் தொடர்பான குறிப்பெடுத்தலும் (Notes taking) மூல உண்மைக்கூறுகளைச் சேகரித்தலும். (Collection of Data)

4. மூல உண்மைக் கூறுகளைப் பகுப்பாய்வு செய்தல்.

5. ஆய்வுத் தலைப்பைப் பல இயல்களாகப் பிரித்து, குறிப்புகளை அல்லது மூல உண்மைக் கூறுகளை அவ்வவ்வியல்களுக்கேற்ப வகைப் படுத்தல்.

6. போதுமான மூல உண்மைக் கூறுகளைச் சேக ரிக்கும் பணி முடிந்ததும் ஆய்வுரையின் முதற்படியை எழுத வேண்டும்.

7. எழுதிய முதற்படியை பகுதி பகுதியாகவோ அல்லது முழுமையாகவோ மேற்பார்வையாள ரிடம் கொடுத்தால், அவர் மறுபார்வையிட்டு முதற்படியைத் திருத்துவார்.

8. முதற்படியைச் சரிவரப் படித்து, பிழைகளின்றி ஆய்வுரையின் இரண்டாம் படியை எழுதுதல்.

9. இறுதிப்படியை எழுதி, சோதித்து, தட்டச்சுக் குக் கொடுத்தல்.

10. தட்டச்சுப் படியை நன்கு படித்து, தட்டச்சுப் பிழைகளை நீக்குதல். ஆய்வுரையினைக் கட்ட மைபபுக்குத் தருதல்.

11. பல்கலைக் கழகத்திற்கு ஆய்வுரையினை அளித்தல்
12. வாய்மொழித் தேர்வு (Oral Examination) என்ற பல நிலைகளாக ஆய்வின் வளர்ச்சிப் படிகளைக் குறிப்பிடலாம். ஒவ்வொரு நிலையிலும் ஆய்வாளர் கவனத்தோடும் ஆர்வத்தோடும் செயல்பட வேண்டும். அப்போதுதான் மேற்கொண்ட ஆய்வுப்பணி செம்மையுறும் ஆய்வுக் கல்வியின் சிறப்பும் துலங்கும்.

## ஆய்வுத் தலைப்பைத் தேர்ந்தெடுத்தல்

### (Choosing a Research Topic)

ஆய்வுக்குத் தகுதியான, தரமுடைய, குறிப்பிட்ட கால அளவில் முடிக்கக் கூடிய, ஆர்வமுள்ள தலைப்பைத் தேர்வு செய்ய வேண்டும். இத்தகைய சிறப்புகள் நிறைந்த ஆய்வுத் தலைப்பைத் தேர்வு செய்வது என்பது பல வழிகளிலும் கடினமானதொரு பணியாகும். என்றாலும், பல நிலைகளிலும் சிந்தனை செய்து ஆய்வுக்குப் பொருத்தமான தலைப்பை ஆய்வாளர் தேர்ந்தெடுக்க வேண்டும்.

ஆய்வுக்குரிய தலைப்பு, சிக்கலை (problem) உள்ளடக்கி இருத்தல் சிறப்பு. ஆய்வு என்பது சிக்கலை நன்கு அணுகி ஆய்ந்து, அச்சிக்கலைத் தீர்வு கண்டு அதன் மூலம் உண்மைகளை வெளிக்கொணர்தல் என்பதே ஆகும். அச்சிக்கலைத் தீர்வு காண ஆய்வாளர் மேற்கொள்ளும் அனைத்து முயற்சிகளும், அதிலிருந்து பல உண்மைகளைக் கண்டுபிடித்துப் பலருக்கும் பயன்பட வேண்டுமென்ற நோக்கில் அமைகின்றன. ஆய்வுக்குரிய சிக்கல் தேர்வு என்பது சமுதாயத்திற்குப் பெரிதும் பயன்பட வேண்டுமென்ற நோக்கிலோ

அல்லது தொழிற்சாலை உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்ற பயன்பாட்டு நோக்கிலோ, அல்லது ஆய்வாளரின் தனிப்பட்ட ஆர்வத் துடிப்பை நிறைவு செய்யும் நோக்கிலோ, அல்லது முன்னிகழ்ந்த ஆய்வு களில் குறைபாடு கண்டால் அக் குறைபாட்டைக் களைந்து உண்மை காணும் உயர் நோக்கிலோ— இவற்றில் ஏதேனும் ஒரு நோககில் தேர்வு செய்யப்பட வேண்டும்.

ஆய்வில் ஈடுபட விழையும் ஆய்வாளர் தாம் எத் துறையில் ஆய்வு நிகழ்த்த விரும்புகிறாரோ அத்துறை யில், பரந்து பட்ட ஆழ்ந்த அறிவுடையவராகவும், மிகுந்த ஆர்வமுடையவராகவும் இருக்க வேண்டும். ஆய்வுக்குரிய ஒரு குறிப்பிட்ட எல்லைப் பரப்பில் அமையக்கூடிய பொருட் பரப்பைப் பற்றி நன்கு பன் முறையும் படித்து, அப்பொருட் பரப்பில் எழக்கூடிய சிக்கல் என்ன? அச் சிக்கல் தொடர்புடைய மூல உண்மைக் கூறுகள் கிடைக்குமா? தீர்வு காணக்கூடிய வழிவகைகள் என்னென்ன? தீர்வு காண முடியுமா? தீர்வு கண்டால் பெறப்படும் உண்மைகள் பயன்படக் கூடியனவாயிருக்குமா? என்ற பல நிலைகளில் ஆய்வுக் குத் தேர்வு செய்யப்படும் சிக்கலைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். அப்பொழுதுதான் ஆய்வுக்குத் தேர்வு செய்யப்படும் சிக்கல் பொருத்தமுடையதாக இருக்கும். ஒருவர் எவ்வளவுக்கெவ்வளவு ஆய்வுக் களத்தைப் பற்றி அறிந்துள்ளாரோ, அவ்வளவுக் கவ்வளவு அக்களத்தின்கண்ணுள்ள ஆய்வு காண வேண்டிய சிக்கல் பரப்புகளையும் தொய்வுகளையும் கண்டுகொள்ள எளிதாகிறது. சிக்கலை உள்ளடக்கிய ஆய்வுத் தலைப்பைத் தேர்வதே ஒரு ஆய்வாளரின் முதல் திறமையாகும்.

ஆய்வுத் தலைப்பு, குறிப்பிட்ட எல்லையில் அமையக் கூடிய பாங்கில் இருக்க வேண்டும். பரந்துபட்ட அளவில் ஆய்வு எல்லைப் பரப்பு அமையும் வகையில் தலைப்பை எடுத்துக் கொண்டு ஆய்வு நிகழ்த்துவது என்பது இயலாத, கடினமான செயலாகும். குறிப்பிட்ட எல்லைப் பரப்பில் அமையும் ஆய்வுத் தலைப்புத் தேர்வு செய்யப்பட்டாலதான் குறிப்பிட்ட கால எல்லையில் ஆய்வினைச் சிறப்புற நிகழ்த்தி முடிக்க முடியும். உதாரணமாக ஆய்வுக்குரிய தலைப்பு "சங்க இலக்கியம்" என்று தேர்ந்தெடுக்கக் கூடாது. சங்க இலக்கியம் முழுமையும் எடுத்துக்கொண்டு ஆய்வதென்பது இயலாத காரியமாகும். ஏதேனும் ஒரு கோணத்தில் சங்க இலக்கியத்தை ஆராயும் வகையில் தலைப்பைத் தேர்ந்தெடுக்க வேண்டும். சங்க இலக்கியத்தில் அகத்திணை, சங்ககால அரசியல் நிலை, சங்க இலக்கியத் தில் கற்பனை என்றவாறு தலைப்பைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அப்பொழுதுதான் ஆய்வின் எல்லை குறிப் பிட்ட எல்லையில் அமையக்கூடியதாகும். ஆய்வினைச் செம்மையுற ஆர்வத்துடன் முடிப்பதற்கு இதுவே சிறந்த வழியாகும்.

தலைப்பைத் தேர்வு செய்யும்போது ஆய்வாளர் தாம் தேர்வு செய்யும் பாடத்துறையில் அல்லது ஆய்வுக் களத்தில் வல்லவராக—அனுபவம் மிக்கவராக விளங்குபவர்களுடன் கலந்தாலோசித்து, தலைப்பைத் தேர்ந்தெடுக்கலாம்.

ஆய்விலேயே ஈடுபட்டுள்ள பேராசிரியர்கள், மேற் பார்வையாளர்கள் போன்றவர்களோடு நேரடித் தொடர்பு கொள்வதே சாலச் சிறந்த வழியாகும். மேற் பார்வையாளர் தம் ஆய்வுப்பணிக் காலத்தில் எழுந்த சில சிக்கல்களுக்குத் தீர்வு காண முடியாத நிலையில் விட்டிருக்கலாம். அவரே முன் வந்து சிறந்த தலைப்பைத் தேர்ந்தெடுத்துக் கொடுக்கலாம். அத்தலைப்பில் ஆய்வாளர் சிறந்த ஆர்வமுடையவராக இருப்பின் தேர்ந்தெடுத்த தலைப்பில ஆய்வு சிறப்புறும்; செம்மை யுறும்.

அவ்வாறு இயலாத போது பத்திரிகை இலக்கியத் (Journal Literature) தொடர்பு நேரடித் தொடர்புக்குச் சிறந்த மாற்றாகும். தேர்ந்தெடுத்த ஆய்வுக்களத் தொடர்பாக வரும் கட்டுரைகளைப் படிப்பது தலைப்புத் தேர்வுக்கு வழி வகுக்கும். இம்முறையால் ஆய்வு செய்து முடித்த, செய்து வருகின்ற ஆய்வுச் சிக்கல்களைப் பற்றி அறிய வாய்ப்பு கிடைக்கின்றது. இதனால் ஆய்வுத் தகுதியுடைய சிக்கலை உள்ளடக்கிய ஆய்வுத் தலைப்பை எளிதில் தேர்வு செய்யலாம்.

மேலும் நமக்கு ஆர்வமூட்டும் பாடத் துறையில் அல்லது ஆய்வுக்களங்களில் வெளிவந்த வெளிவரும் நவீன முதறிஞர் ஆய்வுரைகளைப் (Doctoral Studies) பற்றி அறிந்திருத்தல் மிகவும் இன்றியமையாதது. பல மாதாந்திர வெளியீடுகள், முன்னணிப் பல்கலைக் கழகங்களில் (Leading Universities) அளிக்கப்பட்ட முதறிஞர் ஆய்வுரைகளின் கருத்துச் சுருக்கங்களோடு வெளிவருகின்றன. அச்சுருக்கங்கள் பல நேரங்களில் எதிர்கால ஆய்வுக்கான கருத்துக்களோடு முற்றுப் பெற்றிருக்கும். அவற்றையும் படித்து ஆய்வாளர் தலைப்பைத் தேர்வு செய்வது நலம் பயக்கும்.

1. தலைப்பு, உண்மையிலேயே ஆர்வமூட்டும் தலைப்புத் தானா? என்பதை சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஆர்வமிருந்தால்தான் வெற்றிகரமாக ஆய்வுப் பணி நிறைவேறும். வெற்றிகரமாக ஆய்வை முடிக்கத் தேவையான காலம் ஓரளவு நீண்ட காலமாக இருப்பதால், தலைப்பின்கண் நமக்குக் குன்றாத ஆர்வம் தேவை. ஆர்வத்தை இழக்கும் பட்சத்தில், ஆய்வை முடிப்பது என்பது மிகக் கடினமான பணியாக மாறி விடும்.

2. ஆய்வில் போதுமான கண்காணிப்பு உள்ளதா? ஒரு கல்வி நிலையத்தின் போதனையாளர்களைப் பற்றி எழுப்பிய ஒரு விநோதமான வினவாகத் தோன்றினும், இது முககியமான ஒன்றாகும். பெருகும் தனித்துவம் (Specialisation) காரண

மாகத் தேர்ந்தெடுத்த தலைப்பில் தேர்ச்சியோ (Expertise) அல்லது ஆர்வமோ மிகுந்த அறிஞர்கள் இல்லாமலிருக்கலாம். எனவே, ஆய்வாளர் தலைப் புக்குத் தக்கவாறு குறிப்பிட்ட தலைப்புத் தொடர் பான துறையில் ஆர்வத்தை வளர்க்கும், ஊட்டும் கல்வி நிலையங்களை நாடுவது சிறந்தது.

3. கால வரையறைக்குள் தேர்வு செய்யும் தலைப்பில் ஆய்வு செய்து முடிக்க முடியுமா? தலைப்பு அதற்கேற்ப அமைந்துள்ளதா? சில தலைப்புகள், சான்றுகள் அல்லது மூல உண்மைக் கூறுகள் சேகரிப்புக்கே ஆய்வுக்காலம் முழுமையும் அப கரித்துக் கொள்கிற தன்மையனவாக இருக்கும். நீள் வளர்ச்சி ஆய்வுகளும் (Longitudinal growth studies) நீண்ட கால நோக்க ஆய்வுகளும் (Long term attitude studies) இவ்வகைப்பட்டவை. எவ் வளவு ஆர்வமூட்டும் தன்மையனவாயினும், இவ் வகை ஆய்வுகள் ஆய்வுத் தலைப்புகளுக்கு ஒவ் வாதவை.

4. ஆய்வுக்குத் தேவையான மூல உண்மைக் கூறுகள் எளிதில் கிடைக்கக் கூடியவைதாமா? தேவை யான மூல உண்மைக்கூறுகள் கிடைக்கும் வாய்ப் புகள் மிக அவசியமாகின்றன. ஏனெனில் சரியான மூல உண்மை கூறுகள் தேவையான நேரத்தில் கிடைக்காத காரணத்தால் பல ஆய்வுகள் தாமதித்தும், தடைப்பட்டும் போகக்கூடிய சூழ்நிலை உருவாகும். எனவே ஆய்வுக்குத் தேவையான மூல உண்மைக் கூறுகள் பல வகை களிலும் கிடைக்கும் வாய்ப்புக்கள் அதிகம் உள்ள தலைப்புகளைத் தேர்ந்தெடுப்பதில் மிக்க கவனம் செலுத்த வேண்டும்.

5. ஆய்வுக்குத் தேவையான கருவிகள் உள்ளனவா? தலைப்புக்கு ஏற்றாற்போல, ஆய்வினை நிகழ்த்த சில கருவிகள் தேவைப்படுகின்றன. கள ஆய்வுகளி லும், அறிவியல் ஆய்வுகளிலும் ஆய்வினைச் செம்மையுற நிகழ்த்த கருவிகள் தேவைப்படு கின்றன. தேர்ந்தெடுத்த, தலைப்பில ஆய்வு செய்யப் போதுமான கருவிகள் எளிதில் கிடைக்கக் கூடியவைதாமா என்பதை, நன்கு எண்ணிப் பார்த்துத் தலைப்பைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

6. நூலக வசதிகள் போதுமானதா? பகுப்பு ஆய்வுக் கல்விக்கு (Analytical Research Studies) நூலக வசதிகள் மிகவும் இன்றியமையாதனவாகும். ஒரு சில தலைப்புகள் தேவையான மூல உண்மைக் (Source materials) கூறுகள் கிடைக்காத காரணத் தாலேயே பொருத்தமற்ற தலைப்புகளாக மாறி விடக் கூடும். நூலகத்தின் வாயிலாகக் கிட்டாத மூலங்கள் ஆய்வைப் பெரிதும் பாதிக்கும்.

7. எடுத்த தலைப்பில் ஆய்வினைச் செய்து முடிக்க முடியுமா? ஒரு குறிப்பிட்ட சிக்கலைத் தீர்வு காணத் தகுதியான வழிமுறைகள் வகுக்கப்பட்டிருக்கின் றனவா? மேலும் அவ்வழி முறைகள் சீர்படுத்தப் பட்டிருக்கின்றனவா? என்பதை அறிவதும் முக்கியமே. ஏனெனில் அவ்வாறு செய்யும் பொழுது, நாம் உபயோகிக்க எண்ணுகிற வழி முறைகளைப்பற்றி முடிவு செய்கின்ற வாய்ப்புக் கிடைக்கின்றது.

8. சிக்கல் முக்கியத்துவம் வாய்ந்ததா? இது விடை யிறுப்பதற்குச் சிக்கலான வினாவாகும். முக்கிய

மானது, முக்கியமற்றது என்று சிக்கலைப் பாகுபடுத்துவது எளிதானதல்ல. முக்கியமற்றதாகத் தோன்றுகின்ற ஒரு உண்மையை முக்கியமானதாகக் காட்டவும், மாற்றவும் வலல திறமை அறிஞர்களுக்கும், விஞ்ஞானிகளுக்கும் உண்டு. எனவே, குறிப்பிட்ட சிக்கலுக்குக் காணும் தீர்வுக்குச் செலவிடக்கூடிய காலம், முயற்சி, பொருட் செலவு அனைத்தும் சரிதானா? என்பதைப்பற்றி ஆய்வாளரே சிந்திக்க வேண்டும்; தீர்வு காண வேண்டும்.

## குறிப்பெடுத்தல் (Notes Taking)

ஆய்வுக் கட்டுரை வரையும் நிலைகளில் தலைப்புத் தேர்வுக்கு அடுத்த நிலை ஆய்வுத் தலைப்புத் தொடர்பான குறிப்புகளைச் சேகரிக்கும் நிலையாகும். குறிப்பெடுக்கும் நிலையில் இரு உள்நிலைகள் உள்ளன. அவையாவன :

1. செயல் துணை நூற்பட்டியல் தயாரிக்கும் நிலை

2. தகவல் குறிப்புகளைச சேகரிக்கும் நிலை.

என்பனவாகும். இவ்வியலில செயல்துணை நூற்பட்டியல், தகவல் குறிப்புகள் இவற்றைக் குறிக்கப் பயன்படும் அட்டைகள் பற்றியும், குறிக்கும் முறைகள் பற்றியும், பயன்பாட்டு நோக்கங்கள் பற்றியும் காண்போம்.

## செயல்துணை நூற்பட்டி அட்டைகள்

செயல் துணை நூற்பட்டியல் விவரங்களை எழுத 5'' × 3'' என்ற அளவிலான அட்டைகளைப் பயன்படுத்தலாம்.

ஆய்வுத் தலைப்புத் தொடர்பான நூல்கள், கட்டுரைகள், அகராதிகள், கலைக் களஞ்சியக் கட்டுரைகள், ஏற்கெனவே தயாரிக்கப்பட்ட நிலை யில் நூல்களிலும், ஆய்வேடுகளிலும் இடம்பெறும் துணைநூற்பட்டியல்கள், பருவ வெளியீடுகள், கல்லூரி, பல்கலைக்கழக வெளியீட்டு மலர்கள், சான்றோர் குழு வெளியீடுகள், அரசுத்துறை வெளியீடுகள், நூலகங் களிலுள்ள நூற்பட்டிகள், நூல்களைப்பற்றிய விவரங் கள் அடங்கிய ஆய்வடங்கல்கள் போன்றவற்றை யெல்லாம் பார்த்துச் செயல் துணை நூற்பட்டியலைத் தயாரிக்க வேண்டும். ஆய்வுத் தொடர்பான குறிப்பு களைச் சேகரிக்க இச் செயல்துணை நூற் பட்டியல் பெரிதும் துணையாகும். ஆய்வுக்கு முன்னோடியாக இச்செயல் துணைநூற் பட்டியல் விளங்குகிறது.

நூல்கள், கட்டுரைகள், இதழ்கள், கலைக்களஞ்சியக் கட்டுரைகள் இவற்றின் விவரங்களைச் செயல் துணை நூற்பட்டி அட்டைகளில் குறிக்கும் முறைகள் :

## நூல்

ஒரு நூலை, துணைநூற்பட்டி அட்டையில் குறிக்கும் போது, அந்நூலைப் பற்றிய முழு விவரங்களையும் குறிக்க வேண்டும். நூலை உடனடியாக எடுப்ப தற்கு ஏற்றவகையில் நூலின் நூலகக் குறியீட்டு எண்ணையும், நூலகப் பெயரையும் குறிக்க வேண்டும். நூலை நேரடியாகப் பார்த்துக் குறித்தல் சிறப்பு. அட்டையில் நூலின் நூலகக் குறியீட்டு எண், நூலகப் பெயர், இடம், நூலாசிரியர் பெயர், நூற் பெயர், வெளி யான இடம், வெளியீடு, ஆண்டு என்ற முறைப்படி குறிக்க வேண்டும்.

மாதிரி : 1.

## துணை நூற்பட்டி அட்டை

**நூல்**

| | |
|---|---|
| நூலின், நூலகக் குறியீட்டு எண் | O31 B y1 b4, L4 |
| நூலகம் | O. R. I. Library, University of Madras, Annexe |
| ஆசிரியர் | Robert Ross |
| நூற்பெயர் | **Research-An Introduction** |
| வெளியான இடம் | New York |
| வெளியீட்டோர் | Barnes and Noble Books |
| உரிமைஆண்டு | C. 1974. |

**கட்டுரை :**

கட்டுரையாயின் கட்டுரை இடம்பெறும் நூலின் நூலகம், குறியீட்டு எண், நூலகம், கட்டுரையாசிரியர் பெயர், தலைப்பு, (மேற்கோள் குறியீட்டில்) இடம் பெறும் நூல் (நூலை அடிக்கோடிட்டுக் காட்டுக : மலர்கள், பருவ வெளியீடுகள், கலைக்களஞ்சியம்) பதிப்பாசிரியர், தொகுப்பாசிரியர், [இருந்தால் குறிப்பிடுக. (ப. ஆ) (தொ. ஆ.),] வெளியான இடம், வெளியீடு, ஆண்டு, (பருவ வெளியீடுகளில் மாதம் கொடுக்கப்பட்டிருந்தால் ஆண்டு என்ற முறைப்படி குறிக்க) கட்டுரை இடம் பெறும் பக்க எண்கள் (முதல்—இறுதி) முதலியவற்றைக் குறிக்க வேண்டும்.

மாதிரி : 2.

## துணைநூற்பட்டி அட்டை

கலைக்களஞ்சியம்

**கட்டுரை**

---

| | |
|---|---|
| நூலக எண் | ... |
| நூலகம் | ... |
| க. ஆசிரியர் | Collins, Margaret S., |
| கட்டுரைத் தலைப்பு | "Isoptera" |
| கலைக்களஞ்சியம் | **The Encyclopedia of the Biological Sciences** |
| பதிப்பாசிரியர் | Peter Gray (ed.) |
| வெளியான இடம் | New York |
| வெளியீட்டாளர் | Reinhold Publishing Corporation |
| உரிமை, ஆண்டு | C. 1961 |
| பக்க எண்கள் (முதல்—இறுதி), | PP. 521—523 |

---

மாதிரி : 3.

## பருவ வெளியீடுகள் (Periodicals)

கட்டுரை

| | |
|---|---|
| க. ஆசிரியர் | Letche, J. M., |
| கட்டுரைத்தலைப்பு | "Soviet Veiws of Keynes" |
| பருவஇதழ் | **The Journal of Economic Literature** |
| மாதம், ஆண்டு | June, 1971 |
| பக்க எண்கள் (முதல்—இறுதி) | 442—458. |

மாதிரி : 4.

## செய்தித்தாள் (News Paper)

கட்டுரை

| | |
|---|---|
| கட்டுரை ஆசிரியர் | Balraj Matha |
| கட்டுரைத்தலைப்பு | "Rounding off The Budget" |
| செய்தித்தாள் | **Indian Express** |
| வெளியான இடம் | Madras |
| மாதம், நாள், ஆண்டு | April 27, 1979 |

## துணைநூற்பட்டி அட்டையின் பயன்கள்

1. துணைநூற்பட்டி அட்டைகளில் நமது ஆய்வுக்குத் தேவையான நூல்கள், கட்டுரைகள், குறிப்புகள் கிடைக்கும் நூலகம் போன்ற செய்திகள் முழுமையாக குறிக்கப்பட்டிருப்பதால், ஆய்வுக் குறிப்புகளை விரைவில் சேகரிக்கப் போதுமான விவரங்களைத் துணைநூற்பட்டி அட்டைகள் நமக்குத் தருகின்றன.

2. ஆய்வின் முன்னோடியாகத் திகழும் செயல் துணை நூற்பட்டி அட்டைகளே எளிதில் இறுதி ஆய்வடங்கலைத் தயாரிக்கப் பயன்படுகின்றன.

நூல்கள், கட்டுரைகள் போன்றவற்றின் அடிப்படையில் குறிப்பெடுக்குமுன், செயல்துணை நூற்பட்டி அட்டைகளை வகைப்படுத்திக் கொள்வது நன்று.

## குறிப்பு அட்டைகள்

6''×4'' அல்லது 8''×5'' என்ற அளவிலான அட்டைகளைக் குறிப்பெடுப்பதற்குப் பயன்படுத்தலாம். ஒரு அட்டையில் ஒரு மேற்கோள், அல்லது ஒரு கருத்துச் சுருக்கம், அல்லது ஒரு செய்தி மட்டுமே எழுத வேண்டும். இடம் உள்ளதே என்று ஒன்றுக்கு மேற்பட்ட மேற்கோளையோ, கருத்துச் சுருக்கத்தையோ ஒரே அட்டையில் எழுதக் கூடாது.

## குறிப்பு அட்டையின் பகுதிகள்

ஒரு குறிப்பட்டையைப் பயன்படுத்தும்போது அதில் குறிப்பிடப்படும் விவரங்களை மூன்று பகுதிகளாக பிரிக்கலாம். ஆசிரியர் பெயர், நூற் பெயர் அடங்கும்

முதற்பகுதி, மூல உண்மைக் கூறு அல்லது மேற்கோள் அல்லது கருத்துச் சுருக்கம் இடம் பெறும் மையப் பகுதி, மூலக்கூற்றின் தன்மை, பக்க எண் இடம் பெறும் மூன்றும் பகுதி என்பனவாகும்.

மாதிரி : 5

| | |
|---|---|
| நூற்பெயர் | இலக்கியத்திறன், 'வடிவம்' |
| ஆசிரியர்பெயர் | டாக்டர் மு. வரதராசன், 1965. |
| மூல உண்மைக் கூறு நூலிலுள்ளவாறு பெயர்த்தெழுதப் பட்டது. | "இசைக்கலை ஒலிநயமே அடிப் படையாக உடையது. உணர்ச் சிக்கு வடிவமாக ஒலிநயமும் ஒலி நயத்தின் பயனாக உணர்ச்சியும் விளங்கும் கலை அது. மிகத் தெளி வான வடிவில் இசைத் துறையில் விளங்கும் ஒலிநயம், இலக்கியத் துறையில் -- பாட்டில் - தேவையான அளவிற்கு மிக நுட்பமான வடிவில் விளங்குகிறது." ப. 194. |

முதற் பகுதி

நூலின் அறிமுகம் (Subject identification)

ஆசிரியர் பெயர், நூற் பெயர் மட்டும் குறிக்கப்பட வேண்டும். அட்டையின் மேற்பகுதியில் இடம் பெறு கிறது.

இரண்டாம் பகுதி :

மூலச்சான்று (Record of evidence)

மேற்கோள் அல்லது கருத்துச் சுருக்கம் போன் றவை இடம் பெறும் பகுதியாகும். மேற்கோளாயின்

நூலில் உள்ளவாறு எழுதி, இரட்டை மேற்கோள் குறியீட்டினுள் இடம்பெறச் செய்ய வேண்டும். கருத்துச் சுருக்கமாயின் மேற்கோள் குறியீடு தேவையில்லை.

## இறுதிப் பகுதி
## மூலமும் பக்கஎண்ணும்

குறிப்பு எம்மூல உண்மைக் கூற்றைச் சார்ந்தது என்பதைச் சுட்ட வேண்டும். தேவையானல் குறிப்பினை அல்லது உண்மைக் கூற்றை மதிப்பீடு செய்து ஓரிரு வரியில் குறித்துக்கொள்ளுதல் நலம் பயக்கும்.

### குறிப்புகள்

மூன்று விதமான குறிப்புகள் எடுக்கப்படுகின்றன. அவையாவன :

1. நேரடி மேற்கோள் **(Direct quotation)**
2. பத்திச் சுருக்கம் **(Paraphrase)**
3. கருத்துச் சுருக்கம் **(Summary or Synopsis)**

### நேரடி மேற்கோள்

நூலில் உள்ளவாறு எழுதப்பட்டு மேற்கோள் குறியீட்டில் அமைக்க வேண்டும். மேற்கோளின் முக்கியத்துவத்தை அறிந்து எடுக்க வேண்டும். மேற்கோளில் சில சொற்கள் விட வேண்டியிருப்பின் ...என்ற குறியீட்டையும், நீண்ட இடைவெளியிருப்பின்...... என்ற குறியீட்டையும் பயன்படுத்த வேண்டும்.

### பத்திச் சுருக்கம்

ஒரு குறிப்பிட்ட பகுதியை அல்லது பத்தியை அப்படியே எழுதாமல், கருத்து மாருமல் மாற்றுச் சொற்களால் ஆய்வாளர் எழுத வேண்டும். பத்திச்

சுருக்கத்தில் முழுமை வாக்கியங்களைப் பயன்படுத்த வேண்டியதில்லை. ஆனால், கருத்து விடாமல் தெளிவு படச் சுருக்கி எழுத வேண்டும். சில சமயங்களில் குறிப்பின் ஒரு பகுதி மட்டும் பத்திச் சுருக்கமாகவும் ஏனைய பகுதியை மேற்கோளில் எழுதி அமைப்பதும் உண்டு.

## கருத்துச் சுருக்கம்

கருத்துச் சுருக்கத்தை மேற்கோளிட்டுக் காட்ட வேண்டியதில்லை. கருத்துச் சுருக்கம் ஆய்வுரைக்கு முக்கியத்துவம் அளிக்கும் வகையில் இருத்தல் சிறப்பானது, இலக்கிய ஆய்வுக்காகக் கருத்துச் சுருக்கம் பெரிதும் எழுதப்பட்டு வருகின்றது. உதாரண மாக பாத்திரப் படைப்பின் குணநலன்களைக் குறிக்கும் போது இரததினச் சுருக்கமாகக் குறிக்க வேண்டும்.

## ஆய்வாளர்கள் பின்பற்ற வேண்டியன

குறிப்பட்டைகளைப் பயன்படுத்தும்போது கீழ்க் கண்ட விதிமுறைகளைப் பின்பற்ற வேணடும்:

1. ஒரு அட்டையில் ஒரு குறிப்பு மட்டுமே இடம்பெற வேண்டும்.

2. மூல உண்மைக்கூறு எந்த வகையைச் சார்ந்தது என்பதை அடையாளம் காட்ட வேண்டும்.

3. தகவலை முழுமையாகவும், செம்மையாகவும் குறிக்க வேண்டும்.

4. குறிப்பின் தரத்தை மதிப்பிட்டு ஓரிரு வரிகளில் குறிக்க வேண்டும். அப்போதுதான் அதன் மதிப்பு (Value) உயரும்.

# ஆய்வுமூல உண்மைக்கூறுகள்

(Research Sources or Data)

ஆய்வு என்பது மணற்கேணி போன்றது. ஆய்வுக்குரிய தலைப்பைத் தேர்ந்தெடுத்ததும், அத்தலைப்புத் தொடர்பான நூல்களை அணுகி. ஆழ்ந்து, நுணுகி, ஆயுந்தோறும் புதிய பல கருத்துகள் தோன்றி வளர்ந்துகொண்டே செல்லும் பான்மையது. அத்தகைய ஆய்வுக்கு நிலைக்களனாக அமைவன மூல உண்மைக் கூறுகளாகும்.

## மூல உண்மைக்கூறுகளின் வகைகள்

ஆய்வுக்கு அடிப்படையான மூல உண்மைக் கூறுகளை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். அவை யாவன :

1. முதல்நிலை அல்லது அடிப்படை மூல உண்மைக் கூறுகள் (Primary Sources)
2. இரண்டாம் நிலை மூல உண்மைக் கூறுகள் (Secondary Sources)
3. மூன்றும் நிலை மூல உண்மைக்கூறுகள் (Tertiary Sources)

என்பனவாகும். இவை ஒவ்வொன்று பற்றியும் விரிவாகக் காண்போம்.

## முதல்நிலை மூல உண்மைக் கூறுகள்

எடுத்துக் கொண்ட ஆய்வுத் தலைப்போடு நேரடித் தொடர்புடைய மூல உண்மைக் கூறுகளைத் திரட்ட வேண்டும். இவை ஆய்வுத் தலைப்பிற்கேற்ப நூல்கள் வாயிலாகக் கிடைக்கக்கூடியனவாகவும் இருக்கலாம்;

கள ஆய்வின் மூலமாகத் திரட்டப்பட்டனவாகவும் இருக்கலாம். இம்மூல உண்மைக் கூறுகள் ஆய்வுக்குத் தேவையான நேரடிக் கருத்துகளை வழங்குவனவாகும். ஆதலின் இத்தகைய மூல உண்மைக்கூறுகள், முதல் நிலை மூல உண்மைக்கூறுகள் என அழைக்கப்பெறும்.

**உதாரணங்கள்**

1. ஆய்வுத் தலைப்பு : "சங்ககால வேந்தர்கள்" இவ்வாய்வுத் தலைப்பிற்கு, சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் மூல உண்மைக் கூறுகளாகும். இவற்றிலிருந்தே முதல்நிலை மூல உண்மைக் கூறுகளைத் தொகுத்து ஆய்வினைத் தொடங்க வேண்டும். பத்துப்பாட்டிலும், எட்டுத் தொகையிலும் அரசர்கள், குறுநில மன்னர்கள், வள்ளல்கள் பற்றியும், அவர்களது கொடை, வீரம், புகழ், போர்கள், கால ஆராய்ச்சிக்கான கருத்துக்கள். அரசியற் செய்திகள் பற்றியும் வரும் உண்மைக் கூறுகளே, முதல்நிலை மூல உண்மைக் கூறுகளாகக்கொள்ளத் தக்கனவாகும்.

2. ஆய்வுத்தலைப்பு : "தமிழில் பிழை ஆய்வு" இத் தலைப்பில் ஆய்வு செய்வோர் செய்தித்தாள்கள், விளம்பரங்கள், நூல்கள், தேர்வு விடைத்தாள்கள், சுவர்க்குறிப்புக்கள் போன்றவற்றில் வரும் பிழை களைத் தொகுக்க வேண்டும். அவற்றை நன்கு படித்து, அவற்றில் காணப்படும் பிழைகளைக் கள ஆய்வு மூலமாகச் சேகரிக்க வேண்டும். இப் பிழைகளே ஆய்வுக்குரிய முதல்நிலை மூல உண்மைக் கூறுகளாகும். இவையே இக் குறிப்பிட்ட தலைப்பிற்கு நேரடியாகப் பெறும் மூல உண்மைக் கூறுகளாகும்.

3. நாட்டுப்புறப்பாடல்கள் பற்றி ஆராய்வோருக்குப் பல இடங்களுக்கும் சென்று, கள ஆய்வின் மூல

சேகரித்த பாடல்களே முதல் நிலை மூல உண்மைக் கூறுகளாகும்.

4. ஆய்வுத் தலைப்புத் தொடர்பான நேரடி மூல உண்மைக் கூறுகளைத் தரும் ஆய்வேடுகளும், ஒரு பொருள் நுதலிகளும் (Monography) கள ஆய்வில் பேட்டிமுறை, வினாத்தாள் முறை போன்ற முறைகள் மூலமாகப் பெற்றனவும், முதல்நிலை மூல உண்மைக் கூறுகள் ஆகும்.

5. பொருளாதாரம் தொடர்பான ஆய்வுகளுக்கு பாராளுமன்ற, சட்டசபை நிதிநிலை அறிக்கைகள் போன்றனவும், அரசியல் தொடர்பான ஆய்வுகளுக்கு பாராளுமன்ற சட்டசபை அறிக்கைகளும், ஆவணச் சான்றுகளும் முதல்நிலை மூல உண்மைக் கூறுகளாம்.

## இரண்டாம்நிலை மூல உண்மைக் கூறுகள்

முதல்நிலை மூல உண்மைக் கூறுகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட நூல்களும், கட்டுரைகளும் இரண்டாம் நிலை மூல உண்மைக் கூறுகளாகும். இதில் மொழி பெயர்ப்புகள் (Translations), கருத்துச் சுருக்கங்கள் (Summaries) ஆய்வு மதிப்புரைகள் Reviews of Research), கலைக்களஞ்சியக் கட்டுரைகள் (Encyclopaedia articles), வழிகாட்டி நூல்கள் (Guides), உரைகள் (Commentaries) போல்வன, இரண்டாம்நிலை மூல உண்மைக் கூறுகள் (Secondary Sources) ஆகும்.

### உதாரணங்கள்

1. ஆய்வுத் தலைப்பு : "சங்க இலக்கியத்தில் வேந்தர்கள்." சங்ககால மன்னர்கள், குறுநில மன்னர்கள், வள்ளல்கள் அரசியல் நிலை பற்றி வெளிவந்த நூல்கள், கட்டுரைகள், ஆய்வு மதிப்புரைகள், உரைகள், பதிப்புரைகள் போன்றன இரண்டாம் நிலை மூல உண்மைக் கூறுகளாகும்.

"A History of South India from Pre-historic times to the fall of Vijayanagar"
"The Pandiyan Kingdom"
"The Tamils Eighteen Hundred years ago"
"The Chronology of the Early Tamils"
"Historical Settings in Akananooru"
"Cankam Polity"

"சங்ககால அரசர் வரிசை"

"சங்ககால வரலாறு", "பாண்டியர் வரலாறு"

போன்ற நூல்களெல்லாம் இரண்டாம் நிலை மூல உண்மைக் கூறுகளாகும்.

2. ஆய்வுத் தலைப்பு : "தமிழில் பிழை ஆய்வு"
"நல்ல தமிழில் எழுதுவது எப்படி?"
"பிழையின்றி எழுதுங்கள்"
"Errors Analpsis"

இந்த நூல்களில் பிழைநீக்கி எழுதும் முறை மூலம் பொதுவாக மக்கள் பேச்சில், எழுத்தில் வரும் பிழைகளைத் தொகுத்துக் காட்டியிருப்பதால், இவை மேற்கூறிய ஆய்வுத் தலைப்பிற்கு இரண்டாம்நிலை மூல உண்மைக் கூறுகளாகும். மேலும் பிழை நீக்கம் குறித்து எழுந்த கட்டுரைகளும், இலக்கணிகள் கூறுவனவும் இதிலடங்கும்.

## மூன்றாம்நிலை மூல உண்மைக் கூறுகள்

பாடநூல்கள் போன்றன மூன்றாம்நிலை மூல உண்மைக் கூறுகளாகும். ஆய்வுத் தலைப்பிற்கான நேரடிக் கருத்துக்களை இதில் பெற இயலாவிடினும், மறைமுகமான செய்திகள் போன்றவை ஆய்வுக்குப் பயன்படக் கூடியனவாகவும் அமையலாம. அத்தகைய மூல உண்மைக் கூறுகளை மூன்றாம்நிலை மூல உண்மைக் கூறுகள் அல்லது சார்பு மூல உண்மைக் கூறுகள் (Tertiary Sources) என அழைக்கலாம்.

# 3. களஆய்வும் மூல உண்மைக் கூறுகள் சேகரித்தலும்

(Field Study and Collection of Data)

கள ஆய்வு என்பது ஆய்வாளர் தாம் தேர்ந்தெடுக்கும் ஆய்வுத் தலைப்பைப் பொறுத்து அமைவதாகும். ஆராய்ச்சிக்குத் தேவையான மூல உண்மைக் கூறுகளைத் தேடிப் பல இடங்களுக்கும் சென்று சேகரிக்கும் அடிப்படையில் அமைவதே களஆய்வு (Field Study) என்பதாகும்.

## கள ஆய்வின் நோக்கம்

ஆய்வில் ஈடுபடும் ஆய்வாளர் தமது ஆய்வுத் தொடர்பான மூல உண்மைக் கூறுகளைநேரில் பலஇடங்களுக்குச் சென்று திரட்டி, அவற்றை அடிப்படையாகக் கொண்டு சில கொள்கைகளை வகுத்துக்கொண்டு ஆய்வுத் திட்டம் வரைந்து, அறிவியல் முறைப்படி ஆய்வதே கள ஆய்வின் நோக்கமாகும்.

## களஆய்வுக்குத் தேவையான கருவிகள்

கள ஆய்வில் ஈடுபடுவோருக்கு நாடா ஒலிப்பதிவுக் கருவியும் (Tape Record) நிழற்படக் கருவியும் (Camera) தேவைப்படுகின்றன. நாட்டுப்புறப் பாடல்களைச் சேகரிக்க நாடா ஒலிப்பதிவுக் கருவி பயன்படுகின்றது. கல்வெட்டு ஆய்வில் ஈடுபடுவோருக்கு நிழற்படக் கருவி தேவைப்படுகின்றது. ஆய்வாளர் தாம் காணும் கல்வெட்டை அப்படியே நிழற்படத்தில் படியெடுத்துக் கொணரப் பயன்படுகின்றது.

## ஆய்வுத் தலைப்பும் களஆய்வும்

பல இடங்களுக்குச் சென்று, அயராது, பொருட் செலவினைப் பாராது மூலஉண்மைக் கூறுகளைச் சேக ரிக்கும் நோக்கில், ஆய்வாளர் ஆர்வமுடையவராக இருக்கவேண்டும். அத்தகைய ஆய்வாளரே களஆய் வோடு தொடர்புடைய ஆய்வுத்தலைப்பைத் தேர்ந் தெடுத்து ஆய்வுப் பணியினைத் தொடங்கவேண்டும்.

## களஆய்வின் இன்றியமையாமை

களஆய்வுபற்றி விளக்கும் நூல்கள் ஆங்கிலத்தில் பல உள்ளன. தமிழில் சரசுவதி வேணுகோபால் தம் களஆய்வின் அனுபவங்களைத் திரட்டி ஒரு நூலாக வெளியிட்டுள்ளார், மற்றபடி களஆய்வுபற்றி ஒரு சிலர் தம் நூல்களில் கோடிட்டுக் காட்டியுள்ளார்களே தவிர, விரிவான விளக்கமளிக்க விழையவில்லை. இலக் கியங்களில் கூறப்படும் ஒரு குறிப்பிட்ட காலச் சமுதா யத்தைப் பற்றி ஆராய்பவர், அச்சமுதாயத்தைப் பற்றிக் கூறும் இலக்கியங்கள், நூல்கள், கட்டுரைகள், முதலியவற்றைப் படித்து மூலஉண்மைக் கூறுகளைச் சேகரித்து ஆராய முற்படுகின்றனர். ஆனல் இன்றைய ஒரு சமுதாயத்தைப் பற்றி ஆராய்வோர், மக்கள் வாழ்க்கைநிலை, அச்சமுதாயத்தார் பிற சமுதாயத்தா ரோடு கொண்டுள்ள உறவு முறைகள், பொருளாதார நிலை, பேச்சுவழக்கு போன்றவற்றை நேரடியாக அம் மக்களோடு தொடர்புகொண்டு மூலஉண்மைக் கூறு களைத் திரட்டவேண்டும். களஆய்வு செய்யாவிடின் அச்சமுதாயத்தினரின் அடிப்படையான வாழ்வு நிலையை ஆராய இயலாது. தன் அனுபவத்தையும் தன்னிடமுள்ள மூலஉண்மைக் கூறுகளையும் மட்டும் வைத்துக்கொண்டு ஆய்வு செய்யின் அது முழுமையான—நிறைவான ஆய்வாகாது. உதாரண மாக நீலகிரி மலையில் வாழும் படுகர் பேச்சு மொழியை ஆராய்வதாக வைத்துக்கொள்வோம். படுகர் பேச்சுமொழி என்ன மொழி என்பதை

அறிய வேண்டும். அது தனி மொழியா? அல்லது திராவிட மொழிகளில் அதுவும் ஒன்ரு? வளர்ச்சி யடைந்த மொழியா? என்பதை அறிய முற்பட வேண்டும். அப்போதுதான் அச்சமுதாயத்தினரின் பேச்சு மொழி பறறிய உண்மை நிலையினை அறிய முடியும். எனவே அவர்களுடைய பேச்சுமொழியை ஆராய்பவர் அச்சமுதாயத்தினருடன் உடனிருந்து பன்ளுள் பழகி, பேசி, அவர்களின் மொழியை ஆராய வேண்டும். கள ஆய்வின் மூலமாக அவர்களுடைய பேச்சு மொழி பற்றிய செய்திகள், கருத்துக்கள், தம் அனுபவத்தால் கண்ட உண்மைகள் ஆகியவற்றைக் கொண்டு அம்மொழி பற்றிய ஆய்வினைச் செம்மையுற நிகழ்த்தலாம்.

## கள ஆய்வும் ஆய்வாளரும்

கள ஆய்வில் ஈடுபடும் ஆய்வாளருக்குப் பொறுமையும் ஆர்வமும் வேண்டும். அப்போதுதான் களஆய்வுப் பணி சிறப்பாக நிறைவேறும்; ஆய்வும் துலங்கும்.

## மூல உண்மைக் கூறுகளைச் சேகரித்தல்

ஆய்வுக்குத் தேவையான மூல உண்மைக் கூறு களைச் சேகரிக்க உதவும் கள ஆய்வின் வகைகளாவன.

1, நேர்காணல் அல்லது பேட்டிமுறை (Inrerview)
2. மாதிரி அமைத்தல் (Sampling)
3. உற்ருய்வு முறை (Observation)
4. விஞவரிசை முறை (Questionnaire)

என்பனவாகும்.

## நேர்காணல் அல்லது பேட்டிமுறை (Inteview)

முதன்மை மூல உண்மைக் கூறுகளைச் சேகரிக்கும் முறைகளில் நேர்காணல் முறையும் ஒன்ருகும். எங்

தெந்த வகையில் பேட்டி காண்போரை அணுகி, மூல உண்மைக் கூறுகளைச் சேகரிக்க வேண்டும் என்பதை முன்கூட்டியே திட்டமிட்டுச் செயல்பட வேண்டும். ஆய்வாளர் நேர்காணல் முறையில் மிக்க அனுபவமும், ஆர்வமும் பெற்றிருப்பதோடு, அதன் செயல்முறைகளை நன்கு அறிந்திருக்க வேண்டும். பேட்டியளிப்போரின் மனப்பாங்கறிந்து செயல்படும் திறம் ஆய்வாளருக்கு இன்றியமையாது வேண்டும். ஒருவரிடம் ஆய்வுத் தொடர்பான என்னென்ன மூல உண்மைக் கூறுகளைப் பெற முடியுமோ அவையனைத்தையும் பெறும் பாங்கில் அவரிடம் நேரடித் தொடர்பு கொண்டு உரையாடல் மூலமாகவோ கேள்விகள் மூலமாகவோ உண்மைக் கூறுகளைத் திரட்ட வேண்டும். பேட்டியளிப்போரிடம் முன்கூட்டியே பேட்டியளிக்கும் நாளை நிர்ணயித்துக் கொள்ளுதல் சிறப்பானது.

பேட்டிமுறை அல்லது நேர்காணல் முறை பல வகைப்படும். அவைகளாவன

1. களமுறைப்பேட்டி (Field Interview)
2. வரலாற்றுப்பேட்டி (Historical Interview)
3. அதிகாரத்துவப் பேட்டி (Authoritative Interview)
4. ஆவணப் பேட்டி (Documentary Interview)
5. மதிப்பாய்வு அல்லது அளவாய்வுப் பேட்டி (Survey Interview)

**களமுறைப் பேட்டி (Field Interview)**

மக்கள் தம் சுற்றுப்புறச் சூழ்நிலைகளுக்கேற்ப எவ்வாறு நடந்துகொள்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தினர் மற்ற சமுதாயத்தினரோடு கொண்டுள்ள தொடர்புகள், அவர்களுடைய பொருளாதார

நிலை, தங்களைப்பற்றியும் பிறரைப்பற்றியும் என்ன நினைக்கிறார்கள் என்பன போன்ற செய்திகளை அறிந்து கொள்ள உதவும் நேர்காணல் முறைக்குக் களமுறைப் பேட்டி என்று பெயர்.

**வரலாற்றுப் பேட்டி (Historical Interview)**

வரலாறு சம்பந்தப்பட்ட ஆய்வாளர்களுக்குப் பெரிதும் துணை புரிவதாகும். குறிப்பிட்ட காலத்து வரலாற்று நிகழ்ச்சிகளை அறிந்துள்ளவரிடம் நேரில் சென்று, அந்நிகழ்ச்சிகள் தொடர்பான வரலாற்று உண்மைக் கூறுகளைப் பெற வாய்ப்பளிக்கும் பேட்டி முறைக்கு வரலாற்றுப்பேட்டி என்று பெயர்.

**அதிகாரத்துவப் பேட்டி (Authoritative Interview)**

ஒரு குறிப்பிட்ட துறையில் அதிகாரியாக உள்ள வரிடம் மூல உண்மைக்கூறுகளைத் திரட்டும் முறைக்கு அதிகாரத்துவப் பேட்டி முறை என்று பெயர். நேரடி யாக வினவியறியாமல், அத்துறைத் தொடர்புடைய செய்திகளைக்கூறி, மூல உண்மைக் கூறுகளைப் பெறுவது இப்பேட்டிமுறையின் சிறப்பாகும். உதாரண மாக, வங்கியிலிருந்து கடன் வசதி பெறுதல் பற்றி அறிய விரும்புவோர், நேரடியாக அதுபற்றி விசாரிக் காமல், வங்கியின் நிர்வாகம், நிதி நிலைச்செய்திகள், நாட்டின் பொருளாதார நிலைபற்றி எடுத்துக்கூறி. கடன் வசதித் திட்டத்தைப் பற்றிய மூல உண்மைக் கூறுகளைச் சேகரிக்க வேண்டும்.

**ஆவணப் பேட்டி (Documentary Interview)**

ஆய்வுத் தொடர்பான ஆவணங்கள் போதுமான அளவு கிட்டாதபோது, அவைபற்றி அறிந்தவர் களிடம் காணும் பேட்டி முறைக்கு ஆவணப்பேட்டி என்று பெயர்.

## மதிப்பாய்வுப் பேட்டி (Survey Interview)

சமூகவியல், கல்வியியல், பொருளியல் சம்பந்தப் பட்ட துறை ஆய்வுகளுக்கு மூல உண்மைக் கூறுகளைச் சேகரிக்கமதிப்பாய்வுப்பேட்டி பெரிதும் பயன்படுகிறது. உதாரணமாக, வாக்குப்பதிவுக்கு முன் ஒவ்வொரு கட்சி யினரும் தமக்கு எவ்வளவு வாக்குகள் கிடைக்கும் என்பதைக் குறிப்பிட்ட தொகுதியில் உள்ள சிலரிடம் பேட்டி கண்டு கணிப்பது, நாட்டில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் தெரியாதவர்கள் பற்றிக் கணிப்பது போன்றவை இப்பேட்டி முறையின் பாற்படும்.

### ஆய்வாளர்கள் பின்பற்ற வேண்டியன

1. பேட்டியளிப்பவரின் பெயர், ஊர், நாள், மணி இவற்றைக் குறித்துக்கொள்ள வேண்டும்.
2. பேட்டியின்போது பெறும் அனைத்துச் செய்திகளை யும் விவரங்களையும் கவனமாகக் குறித்துக் கொள்ள வேண்டும்.

## மாதிரி அமைத்தல் (Sampling)

மூல உண்மைக் கூறுகளைச் சேகரிக்கும் முறையில் மாதிரி அமைத்தல் என்பதும் ஒன்றாகும். சில சமயங் களில் ஆய்வுக்குட்பட்ட ஒவ்வொரு பொருளையும், வினாவையும் அல்லது நபரையும் நோக்குவது மிகவும் கடினமான ஒன்றாக அமைந்து விடுகின்றது. மாதிரி என்பதன் பொருளே முழுமை அளவில் ஒரு சிறிய அளவு என்பதாகும், எனவே உண்மையிலேயே பிரதி நிதித்துவம் வாய்ந்த ஒரு மாதிரியுடன் பணியைத் துவக்கலாம். இம்மாதிரியானது ஆய்வுக்குட்பட்ட பல 'வகை'களையும் (Types) ஒரு விகித அளவில் கொண்டுள்ளதாக இருக்க வேண்டும். மொத்தப் பொருட்களையும், நபர்களையும் வரையறுப்பதன்மூலம்

'மாதிரி அமைப்பு' ஏற்படுத்தப் படுகின்றது. இதுவே மாதிரியின் முதற்படியாகும்.

சில நேரங்களில் இம்முறைமூலம் ஆய்வுக்கான முழுப்பட்டியல் தயார்செய்வது மிகக் கடினமான வேலையாக அமைந்துவிடுகின்றது. உபயோகமான மூல உண்மைக் கூறுகள் பல சமயங்களில் ஒத்துழைக்க விழைவதில்லை. எடுத்துக்காட்டாக சமூகவியல் ஆய்வுகளில் சமூக விரோதிகள், குற்றவாளிகள் போன்றோர் எளிதில் கண்டு நெருங்கக் கூடிய நபர்களாக இருப்பதில்லை.

எடுக்கப்படும் மாதிரிக் கூறுகளில் இரண்டு வகைகள் உண்டு. அவையாவன.

1. குறிப்பான அளவு மாதிரிக் கூறு.

2. குறிப்பின்மை மாதிரிக் கூறு.

என்பனவாகும். ஆய்வு மேற்கொள்ளும் முழுமைத் தொகுதியில் (Larger whole) வரும் அனைத்துப் பிரிவுகளுக்கும் முக்கியத்துவம் அல்லது பிரதிநிதித்துவம் அளிக்கும் வகையில் அனைத்துப் பிரிவுகளிலிருந்தும் மாதிரிக்கூறு எடுக்கவேண்டும். இதற்கு குறிப்பான அளவு மாதிரிக்கூறு என்று பெயர். அவ்வாறில்லாமல் அங்கொன்றும் இங்கொன்றுமாக மாதிரிக்கூறு எடுக்கப்படும் மாதிரிக்கூறு குறிப்பின்மை மாதிரிக் கூறு எனப்படும். உதாரணமாக, பஞ்சாலைத் தொழிலாளர்களின் பிரச்னைகளை ஆய்வதாக வைத்துக் கொள்வோம். ஒவ்வொரு அரசியல் கட்சியைச் சேர்ந்த தொழிலாளர்களும் அக்கட்சியின் பெயரில் தொழிற்சங்கங்களை அமைத்துள்ளனர். அனைத்துத் தொழிற் சங்கங்களுக்கும் பிரதிநிதித்துவம் வழங்கும் வகையில் ஒவ்வொரு அரசியல் கட்சித் தொடர்பான தொழிற்சங்கத்திலிருந்தும் ஒவ்வொரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுக்கவேண்டும். இவ்வாறு எடுப்பது குறிப்பான மாதிரிக்கூறு ஆகும்.

அவ்வாறில்லாமல் ஆய்வாளர் ஒரு சில கட்சித் தொடர்பான தொழிற் சங்கங்களிலிருந்து மட்டும் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பது குறிபபின்மை மாதிரிக்கூறு ஆகும்.

மாதிரி அமைப்பில் பல்வேறு வகைகள் உள்ளன. அவற்றில் விரைவுமாதிரி அமைப்பு (Random Sampling) படிவ மாதிரியமைப்பு (Stratified Sampling), அளவை மாதிரியமைப்பு (Quota Sampling) என்பன முக்கியமானவையாகும்.

## விரைவு மாதிரியமைப்பு (Random Sampling)

முழுமையான அமைப்பில் ஒன்றை மாதிரியாக எடுத்து ஆய்வு செய்யும் முறையாகும். இம்முறை மாதிரியமைபபு சமுதாயத்தில் அனைவரையும் தன் கண்ணோக்கில் கொண்டு வருமென்பது கடினமே. மாறுபட்ட விகிதாச்சார பிரதிநிதித்துவத்தை இம்முறை கொண்டதாகும். இவ்வமைப்பில் ஆய்வுக்கென எடுக்கப்படும் மாதிரிக்கூறு குறிப்பின்மை மாதிரிக்கூறு ஆகும்.

## படிவ மாதிரியமைப்பு (Stratified Sampling)

விரைவு மாதிரியமைப்பில் மாறுபட்ட விகிதாசார பிரதிநிதித்துவம் (Representation) ஏற்படுத்தக் கூடிய சிக்கலைப் போக்கவே இம்முறை பயன்படுகின்றது. இதன்படி மொத்த அமைப்பில் ஒரு வகைப்படு. (Homogeneous) சார்குழுக்களை (Suo-groups) அமைத்துக் கொள்கிறோம். இம்மாதிரியமைப்பில் பிரதிநிதித்துவம் பெறும் மூலக்கூறு குறிப்பான அளவு மாதிரிக்கூறு ஆகும்.

## அளவை மாதிரியமைப்பு (Quota Sampling)

தேர்வு செய்யப்பட்ட மாதிரிக்கூறு ஆய்வுக்குப் போதுமான அளவை மாதிரியாக இருக்கவேண்டும்.

மேலும் அம்மாதிரிக்கூறு தன்னையொத்த பிற பொருட்களை பிரதிபலிப்பதாக இருப்பதால் மீண்டும் மீண்டும்பொருளுடன் தொடர்புகொண்டு, அதை நன்கு சோதனை செய்து கொள்ள வேண்டும். வேதியியலில் உப்புப் பகுப்பாய்வில் கொடுக்கப்படும் உப்பின் அளவு குறிப்பிட்ட அளவாக இருக்கும். அதனைப் பல சோதனைக்குள்ளாக்கி அதன் தரத்தைக் கண்டுபிடிக்கிறோம். குறிப்பான அளவு மட்டும் எடுத்துச் செய்யும் ஆய்வு அளவை மாதிரியமைப்பாகும். மாதிரியின் அளவு பெரும் அளவின் மாதிரியாக அமைவது மிகவும் முக்கியமானது.

## மாதிரியமைப்பின் பயன்கள்

1. மாதிரியமைத்தல் முறையினால் அறிவியல் தொடர்பான ஆய்வுகளில் குறைந்த நேரத்தில் மிகுதியான பயன்களைப் பெறலாம்.

2. வேதியியல் பகுப்பாய்வில் (Analysis) பெரும் அளவில் சோதனைப் பொருளை எடுத்துப் பல மணி நேரம் சோதனை நிகழ்த்துவதைவிட, சோதனைப் பொருளின் ஒரு மாதிரிக்கூறு மட்டும் எடுத்துக் குறைந்த நேரத்தில் அதைப் பல சோதனைகளுக் குள்ளாக்கலாம்; உண்மை காணலாம். குறைவான செலவில் மிகுதியான பயன்களைப் பெற இம்மாதிரி அமைத்தல் முறை அறிவியலில் பயன்படுத்தப்படுகின்றது.

3. கல்வியியல், உளவியல், சமூக வாழ்வியல், பொருளியல், போன்ற துறைகளில் நிகழ்த்தப்படும் அளவாய்வு அல்லது அளந்தறிமுறை (Survey Method) ஆய்வுகளில் இம்மாதிரி அமைத்தல் முறை பெரிதும் பயன்படுகிறது.

4. சமூகச் சார்பான புள்ளி விவர ஆய்வு முறையிலும் (Statistical Method) இம்மாதிரி அமைத்தல் முறை பயன்படுத்தப்படுகின்றது.

## உற்றுய்வு முறை (Observation)

கள ஆய்வில் உற்றுய்வு முறை சிறந்த ஒன்றுகும், பெரும்பாலான கள ஆய்வுகள் உற்றுய்வு முறையையும் வினுவரிசை முறையையும் அடிப்படையாகக் கொண்டமைகின்றன. இவ்விரு முறைகளில் உற்றுய்வு முறையே பெரும் அளவில் கள ஆய்வில் பயன்பட்டு வருகின்றது. உளவியல், அறிவியல், புவியியல், கட்டிடக்கலையியல் ஆய்வுகளில் இம்முறை பெரிதும் பயன்படுத்தப்படுகின்றது. இவ்வாய்வு முறை ஆய்வாளரின் ஆர்வத்தைப் பொறுத்தே சிறப்புறுகின்றது. உற்றுய்வு முறையில் இருவகையான முறைகள் உள்ளன. அவையாவன:

1. பங்கேற்பு உற்றுய்வு முறை

2. அமைக்கப்பட்ட உற்றுய்வு முறை

என்பனவாகும். உற்றுய்வு நிகழ்த்தும் ஆய்வு நேரடியாகப் பங்குகொண்டு நிகழ்த்தும் ஆய்வு பங்கேற்பு உற்றுய்வு என அழைக்கப்படும். உற்றுய்வு முறையினை எவ்வாறெல்லாம் செம்மையுற நிகழ்த்த வேண்டும் என்று திட்டமிட்டு மேற்கொள்ளும் உற்றுய்வுமுறை அமைக்கப்பட்ட உற்றுய்வு முறை எனப்படும். உதாரணமாக, ஒரு குறிப்பிட்ட வட்டார மொழியின் இயல்புகளை ஆராய வேண்டின் உற்றுய்வு முறை பெரிதும் பயன்படும். அவ்வட்டார மொழி பேசும் மக்களுடன் கலந்து பேசி உற்றுய்வு முறையில் உண்மைக்கூறுகளைப் பெறலாம். நேரடியாகப் பங்குகொண்டு இவ்வாய்வில் உண்மைக் கூறுகளைப் பெறுவதால், இது பங்கேற்பு உற்றுய்வுமுறையின் பாற்படும். அக்குறிப்பிட்ட வட்டார மொழியின் இயல்புகளை அறிய, மூல உண்மைக்கூறுகளை எவ்வாறெல்லாம் உற்றுய்வு முறைமூலம் பெறலாம் எனத்திட்டமிட்டும் செயலபடுத்தலாம். இவ்வாறு திட்டமிட்டு மேற்

கொள்ளும் உற்றுய்வு முறை, அமைக்கப்பட்ட உற்றுய்வு என அழைக்கப்படும். உற்றுய்வின் மூலம் அம்மொழி பற்றிக் கிடைக்கும் உண்மைக் கூறுகளைப் பதிவு செய்து கொள்ளவேண்டும். அம்மொழியின் தனிப்பட்ட இயல்புகளைப் பற்றி கிடைக்கும் சான்றுகளைத் தனியாகப் பதிவு செய்து கொள்ள வேண்டும். இவ்வாறு உற்றுய்வு முறை மூலம் உண்மைக் கூறுகளைச் சேகரிக்கலாம்.

## செயல் ஆய்வு (Action Research)

செயல் ஆய்வு என்பது உற்று நோக்கு ஆய்வு தான். ஆய்வாளர் ஆய்வுப் பொருட்களின் (Subjects) மத்தியிலேயே சென்று நெருங்கிப் பழகி மூல உண்மைக் கூறுகளைச் சேகரிக்கும் உற்றுய்வுதான் 'செயல் ஆய்வு' (Action Research) என அழைக்கப்படுகின்றது. பொருட்களுடன் நாமும் இரண்டறக் கலந்து வேலை செய்ய வேண்டும். உதாரணமாக ஒரு தொழிற்சாலையில் வேலை செய்யும் தொழிலாளர்களைப் பற்றி ஆய்வு செய்வதாக வைத்துக் கொள்வோம். ஆய்வாளரும் ஒரு தொழிலாளியாக அவர்களுடன் சேர்ந்து உழைக்க வேண்டும். ஆய்வுக்குரிய அரிய பல மூல உணமைக்கூறுகளைப் பெறுவதற்கு இதுவே சிறந்த வழியாகும். அவர்கள் நமது உண்மையுரு அறியா வண்ணம் அவர்களிடம் பழக வேண்டும். அவ்வப்போது ஆய்வுத் தொடர்பான விஞக்களைக் கேட்டு உணமைக் கூறுகளைப் பெறலாம். இச்சமயங்களில் குறிப்பெடுத்தல சற்றுச் சிரமமாக இருந்தபோதிலும், சிறு துண்டுக் காகிதங்களில் அவ்வப்போது குறிப்பெடுத்தும், மறைத்து வைக்கப்பட்ட நாடா ஒலிப் பதிவுக் (Tap Recorder) கருவியல் பதிவு செய்தும் தகவல்களைப் பெறலாம். இவ்வாறு ஊற்றுய்வின் வகைப்பட்ட செயல் ஆய்வு முறை மூலம் உண்மைக்கூறுகளைச் சேகரிக்கலாம்.

உளவியல் துறையில் உற்று நோக்கு (Observation) ஆய்வு பெரிதும் பயன்பட்டு வருகின்றது. அத்துறையில் உற்றாய்வு முறைத் தோற்றத் திறகு வித்திட்டவர் வாட்சன் (Watson) என்பவராவர். உளவியல் ஆய்வில் உற்றாய்வு என்பது, ஒரு உயிரின் புறத்திருந்து அவ்வுயிரின் நடத்தையில் ஏற்படும் மாறுதல்களை உற்றுநோக்கி ஆய்வதன் மூலம் அவ்வுயிரின் உள (அக) நிகழ்ச்சிகளை (அகநடத்தைகளை) உய்த்துணர்ந்து கொள்ள முடியும் என்பதே ஆகும்.

சோதனை முறை (Experiment) என்பது உற்றாய்வின் வகைப்பட்டதாகும்.

## வினாவரிசை முறை (Questionnaire)

வினாவரிசை முறை என்பது களஆய்வின் வகைப்பட்டதே. ஆய்வுத் தலைப்புத் தொடர்பான முதல்நிலை மூல உண்மைக் கூறுகளைப் பெறுவதற்கான முறைதான் வினாவரிசை (Questionnaire) முறை என்பதாகும். ஆய்வாளர் முன்கூட்டியே என்னென்ன வினாக்களைக் கேட்கலாம் என்பதை எழுதிக் கொள்ள வேண்டும். வினாக்கள் குழப்பத்தை உண்டுபண்ணும் வகையில் அமையக்கூடாது. பதிலிறுபபவரிடம் ஆய்வுத் தொடர்பான முழு உண்மைகளையும் பெறும் பாங்கில் வினாக்களைக் குறிப்பதில் ஆய்வர் தனிக் கவனம் செலுத்த வேண்டும். மூல உண்மைக் கூறுகளைப் பெறும் அடிப்படையில் வினாவரிசை முறையை இரண்டாகப் பிரிக்கலாம். அவையாவன :

1. நேரடி வினாவரிசை முறை 2. அஞ்சல் வழி வினாவரிசை முறை (Postal Questionnaire) என்பனவாகும்.

## நேரடி வினாவரிசை முறை

வினாவரிசை முறையில் நேரடியாக வினாக்களைக் கொடுத்து மூல உண்மைகளைச் சேகரித்தலே சிறந்த முறையாகும். நேரடி வினாவரிசையின் மூலம் பதிலிறுப்

பவரின் மனநிலை மற்றும் அவரது சுற்றுப்புறச் சூழ்நிலை, பொருளாதாரநிலை போன்றவற்றை நேரடியாக அறிய வாய்ப்புக் கிடைக்கிறது. ஏற்கெனவே நாம் குறித்த வினாக்களுக்கு மேலாக அவருடன் உரையாடியும் அரிய பல உண்மைகளை அறியும் வாய்ப்பை நல்குவது நேரடி வினாவரிசை முறையாகும்.

ஆய்வாளர்கள் நேரடி வினாவரிசை முறையில் வழக்கமான, மற்றும் வழக்குக்கு மாறான புதுமை வழிகள் இரண்டையும் பயன்படுத்துகிறார்கள். நேரடி வினாவரிசை முறையில் ஆய்வாளர் சிறிதளவே தயாரிக்கப்பட்ட வினாக்களுடனும் மூல உண்மைக் கூறுகளைச் சேகரிக்க விழையலாம். அவ்வாறு ஆரம்பிக்கும்போது, அவ்வாறு துவக்கும்போது பலன் தரும் ஆய்வுப் பரப்புகளிலும் அவர் தன் விசாரணையை வைத்துக் கொள்ள வேண்டும். ஆனால் இதற்கு தேவையான திறமையும், அனுபவமும், சதுரப்பாடும் அவசியம். விடையிறுப்பவர் சங்கடப்படாமல் தாராளமாக மனம் விட்டுப் பேசும்படி செய்ய வேண்டும். "நாடாப் பதிவு" உபயோகிக்க வேண்டியிருப்பின், முன்கூட்டியே அனுமதி பெற்றுக் கொள்ளலாம். இவ்வாறான முறை ஆய்வுகளில் ஆய்வுப் பொருட்களுக்கேற்ற (Subjects) சில தரமான வினாக்களுக்கு விடை கிடைக்காமல் போகவும் நேரிடலாம். எனவே, இம்முறை மூலம் ஆய்வுப்பணி அமையின், ஆய்வுப் பணிக் காலத்தை மிக நீண்ட கால அளவாக அமைக்க வேண்டும்.

அதிக அளவிலான வழக்கு முறை நுணுக்கங்கள் (Formal Techniques) மதிப்பாய்வில் (Survey worK) உபயோகிக்கப்படுகின்றன. மாதிரி அமைப்பில் உள்ள ஒவ்வொரு நபரும் ஒரே மாதிரியான வரிசைக் கிரமத்தில் பதில் அளிக்கின்றனர். இயலுகின்ற சமயத்

திலெல்லாம் மாற்று விடைகளும் (Alternative Answers) தந்தால், சரியான பதிலைச் சரியெனச் சுட்டும் குறியீடு மூலம் விடையிறுத்து விடுவார்கள்; தனியாக எழுதிக் கொண்டிருக்க வேண்டியதில்லை,

சில சமயங்களில் பதிலிறுப்பவர் தனதல்லாத பதிலை அளித்திருக்கலாம். அல்லது எல்லாப்பதில் களுமே பொருத்தமற்றவைகளாக இருக்கலாம். எனவே ஒரு 'மாதிரி ஆய்வை' (Pilot Survey) மட்டும் நடத்துவதன் மூலம் பெற்ற தகவல்களைச் சரிபார்த்துக் கொள்ள முடியும். ஒவ்வொரு விடைப்பட்டியல் பின்னும் "மற்ற பதில்கள்" என்று தலைப்பிட்டுப் போதுமான அளவு இடம் விடுவது நல்லது.

## உண்மைகளை வெளிப்படுத்தும் வினாக்கள்

இத்தகைய வினாக்களை வினாப்பட்டியலில் சேர்த்தல் மிக அவசியம். நமது பகுப்பாய்வுக்கு (Analysis) எலலா வகையான செய்திகளையும் வெளிக்கொணரும் தன்மை வேண்டும். பதிலிறுப்பவர் உணர்ச்சி வசப்படக் கூடிய (Sensitive) வினாக்களை அட்டவணையின் இறுதி யில் வைத்துக் கொள்ள வேண்டும்.

## தேர்ந்து பதிலிறுக்கும் வினாக்கள்

ஒரு வினாவிற்கான பல பதில்களையும் கூறி, அதில் சிலவற்றை மட்டுமே பதிலிறுப்பவரைத் தேர்ந்து கூறுமாறு செய்வதாகும். இதன் மூலம் அவரது மனப்பக்குவம், மனவோட்டம் போன்றவற்றை அறிய இயலுகிறது.

## மனப்போக்கு வினாக்கள் (AttitudeQuestions)

இத்தகைய வினாக்கள் ஒருவரின் எண்ண வலி மையை வெளிப்படுத்துவனவாக இருக்கலாம். இதற்கு பலதரப்பட்ட அழுத்தங்கள் (Intensing) கொண்ட விடைகள் தரப்பட்டிருக்க வேண்டும்.

## நேரடி விஞவரிசைப் பட்டியல் தயாரிக்கும் முறை

முதலாவதாகத் தயாரிக்கப்படும் விஞப் பட்டியல் குறைவான அளவு விஞக்களைக் கொண்டிருக்க வேண்டும். ஏனெனில் பதிலிறுப்பவர் மலைத்துவிடும் போது முழு உண்மையும் வெளிப்படாமற் போக வாய்ப்புண்டு.

இரண்டாவதாக, மிகச் சரியான பதிலளிக்கும் வகைப்பட்ட விஞக்களாக அமைக்க வேண்டும். விஞக்கள் பதிலிறுப்பவருக்குச் சங்கடத்தை உண்டாக்காத வகையில், விஞக்களை அமைத்தல் சிறப்பானது.

மூன்ருவதாக, விஞக்களின் வார்த்தையோட்டம் பேட்டயளிப்பவரைக் குழப்பா வண்ணம் இருத்தல் வேண்டும்.

நான்காவதாக, 'விஞத் தொடர்' சீரிய வரிசைக் கிரமப்படி அமைந்திருத்தல வேண்டும்.

இக்குறைபாடுகளைத் தவிர்க்க ஒரு சிறு குழுவிடம் 'மாதிரி ஆய்வு' (Pilot Survey) செய்வதே சாலச் சிறந்த வழியாகும். இதனுல நமது வடிவ அமைப்பில் (Design) உள்ள குறைபாடுகள் தெற்றென விளங்குவதால் அவைகளைக் களைவது எளிதாகி விடுகிறது.

## அஞ்சல் வழி விஞவரிசை முறை

விஞக்களைக் குறித்து, பதிலிறுப்பவருக்கு அஞ்சல் மூலமாக அனுப்பி, மூல உண்மைக் கூறுகளை அல்லது பதில்களைப் பெறலாம். இம்முறையில் விஞக்களைத் தெளிவாகக் குறித்தலில் ஆய்வாளர் தனிக்கவனம் செலுத்த வேண்டும. குழப்பமான விஞக்கள இருந்தால் சரியான பதிலைப் பெற முடியாது போகலாம். இம் முறையில் மூல உண்மைக்கூறுகளைச் சேகரிக்கக் கால தாமதம் ஏற்படலாம்; அஞ்சல் தாமதம் ஏற்படலாம்; முன்பின் அறிமுகம் இல்லாதவர்களுக்கு விஞக்களை

அனுப்பிப் பதில்களைப் பெறுவதென்பது சற்றுக்கடின மான காரியம்தான். வினுக்களுக்குப் பதிலிறுப்பவர் பதில்களை எழுதி அஞ்சலில் சேர்க்க வேண்டும் என்ற நிர்ப்பந்தத்திற்கு உட்படுவதில்லையாதலால், ஒரு சிலரிடமிருந்து இம்முறைமூலம் பதில்களைப் பெறுவது கடினமாகும்.

இவ்விரு முறைகளும் வினுவரிசை முறைகளில் இடம்பெற்றாலும், சிறந்த முறையாக நேரடி வினு வரிசை முறையைக் கொள்ளலாம். ஆய்வாளர் தமக்கு எது சிறந்த முறையாக கருதுகின்ருரோ அம்முறை யைப் பின்பற்றலாம்.

வினுவரிசை முறையாகப் பெறும் பதில்களின் அடிப்படையில், வினு வரிசை முறையை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். அவையாவன:

**1.** நெகிழ்வு வினுவரிசை முறை, **2.** தேர்வு வினு வரிசை முறை என்பனவாகும்.

## நெகிழ்வு வினுவரிசை முறை

வினுக்கள் மனம் திறந்த நிலையில் பதிலிறுக்கும் வகையில் அமைய வேண்டும். பதில்கள் சுருக்கமாகவும் அதே சமயத்தில் முழுமையான உண்மைகளை வெளிக் கொணரும் பாங்கிலும் அமையும் வினுவரிசை முறையை நெகிழ்வு வினுவரிசை முறை என்பர்.

## தேர்வு வினுவரிசை முறை

இம்முறையில் கேட்கும் கேள்விகளுக்குப் பதில்கள் ஆம், இல்லை, சரி, உண்டு என்றவாறு ஒரே சொல்லில் அமையக்கூடிய வகையில் கேள்விகளைத் தேர்ந் தெடுத்து அமைப்பதாகும். இதனுல் இத்தகைய வினு வரிசை முறையை, தேர்வு வினுவரிசை என அழைப்பர்.

## ஆய்வாளர் பின்பற்ற வேண்டியன

1. விஞக்கள் ஒவ்வொன்றும் தெளிவாகவும், ஆய்வாளர் எதிர்பார்க்கும் பதிலைத் தரக்கூடியதாகவும் இருத்தல் வேண்டும்.

2. நேரடி விஞவரிசை முறையில் பதிலிறுப்பவரிடம் அவரது மனநிலை அறிந்து உரையாடி விஞக்களைக் கொடுத்துப் பதில்களைப் பெற வேண்டும். தொடக்கத்தில் அவரை நல்ல மனநிலைக்குக் கொண்டு வரும் வகையில் அமைத்துக் கொள்வதில் ஆய்வாளர் திறமையாகவும், சாதுர்யமாகவும் செயல்பட வேண்டும்.

3. கேள்விகள் பதிலிறுப்பவுரைப் பாதிக்கும் வகையில் அமையக்கூடாது. உதாரணமாக, தெருக்கூத்துப் பற்றி ஆய்வு செய்பவர், தெருக்கூத்து நடிகரிடம், மூல உண்மை கூறுகளைச் சேகரிப்பதாக வைத்துக்கொள்வோம். தங்கள் நடிப்புப் பிடிக்காதபோது ரசிகர்கள் எவ்வாறு நடந்துகொள்வார்கள்? என்றவாறு விஞ அமைக்கலாம். இதே விஞவை தங்கள் நடிப்புப் பிடிக்காதபோது ரசிகர்கள் என்ன செய்வார்கள்? உங்களுக்கு என்ன கதி ஏற்படும்? என அமைக்கக் கூடாது. விஞ வரிசை அமைப்பதில் ஆய்வாளர் தனிக்கவனம் செலுத்த வேண்டும்.

4. பதிலிறுத்தார் பெயர், வயது, முகவரி, நாள், மாதம், ஆண்டு இவற்றைக் குறித்துக் கொள்ள வேண்டும். ஆய்வுக் கட்டுரை வரையும்போது இவற்றைக் குறிக்க வேண்டி வரும்.

## கள ஆய்வின் பயன்கள்

1. கள ஆய்வின் மூலமாக அரிய பல மூல உண்மைக் கூறுகள், புதிய செய்திகள், கருத்துக்கள், நாட்டுப்புறப்பாடல்கள் போன்றவற்றை வெளிக் கொணரலாம். அதனுல் பலரும் பயன் பெறுவதுடன், குறிப்

பாக ஆய்வாளருக்குப் பெரிதும் உறுதுணையாக அமையும்.

2. ஆய்வுத் தலைப்பிற்குப் பல்வேறு முறைகளிலும், எவ்வாறெல்லாம் அணுகினால் அரிய பல உண்மைக் கூறுகளைத் திரட்ட முடியும் என்ற அனுபவம் கள ஆய்வின் மூலமாக ஏற்படும்.

3. பேட்டி காணல் முறை மூலம் பேட்டிக்குட்பட்டவரை நன்கு எடைபோட்டுப் பார்க்க இயலும். இவர் படைத்த நூல்களைப்பற்றிய முழு உண்மைகளை யும், நூல் எழுதுவதற்குரிய அடிப்படையான சமுதாயச் சூழல்கள். அவரின் அனுபவங்கள், அவரது பொருளாதார நிலை, மனநிலை போன்ற வற்றையும் அறிய வாய்ப்பளிபபது கள ஆய்வே ஆகும்.

4. நூல்களின் வாயிலாக அறிவதை வைத்து ஆய்வு நிகழ்த்தினால், அவ்வாய்வு முழுமையான ஆய் வாகாது. "கற்றலின் கேட்டலே நன்று; கண்டால் அதனினும் நன்று" என்ற முதுமொழிக்கேற்ப, நேரில் சென்று உண்மைகளைத் திரட்டவும், ஆய்வு பூர்ணத்துவம் பெறவும் வழிவகை செய்வது கள ஆய்வு ஆகும்.

# 4. உண்மைக் கூறு பகுத்தல்

## (Analysis of Data)

தலைப்புத் தேர்ந்தெடுக்கப்பட்டு, அனுமானம் ஒன்றை அமைத்த பின்னர், அனுமானத்தை நிரூபிக்க வேண்டித்தான் மூல உண்மைக்கூறுகள் சேகரிக்கப்படுகின்றன. அனுமானம் நிரூபிக்கப்பட்டதும் அது கோட்பாடாக, உண்மையாக மாறிவிடுகிறது. உண்மைக் கூறுகளைப் பகுத்து, வகைகளாகப் பிரித்து, பின்னர் அவை நிரூபணம் செய்ய முயற்சிக்கப்படுகின்றன. ஆய்வுக்கட்டுரை எழுதுவதற்கு முன்னர் உண்மைக்கூறு பகுப்பு நடைபெறுகிறது. ஆய்வுக் கட்டுரை எழுதுவதற்குரிய உட்தலைப்புக்கள் உண்மைக்கூறு வகைகளுக்கேற்ப அமையக்கூடியதாக உள்ளன. உண்மைக்கூறுகளை, வகைப்படுத்தப்பட்டு, எடுத்த பொருளைத் தீர்க்கும் வகையில் அல்லது நிரூபிக்கும் வகையில் கையாளப்படுகின்றன. சென்னை நகரின் தொழில் வளர்ச்சி குறித்து ஒருவர் ஆராய்ச்சி செய்வதாக வைத்துக்கொண்டால், அவர் சென்னை நகரைப்பற்றிய அனைத்துச செய்திகளையும் சேகரித்து வைத்திருப்பார். சென்னை நகர் எப்போது அனைவருக்கும் தெரியும் வகையில் மலர்ந்தது? முந்தைய காலத்தில் சென்னை நகர் எப்படி இருந்தது? கிராமமாக இருந்ததா? அல்லது வேறு எம்மாதிரியாக இருந்தது? என்பது பற்றியும், சென்னை என்ற பெயருக்குரிய காரணம், ஆரம்ப காலத்தில் என்னென்ன தொழில்கள்

நடைபெற்று வந்துள்ளன, யார் யார்? சென்னையில் வந்து குடியேறினார்கள்? ஆக்கிரமிப்புச் செய்தார்களா? அவர்களது பின்னணி, சமூக சூழ்நிலை, பொருளாதார வளம் மற்றும் சென்னை நகரில் முதன்முதலில தொழிற்சாலை எப்போது ஏற்பட்டது? யார் ஏற்படுத்தியது? அதற்குரிய காரணங்கள் என்ன? முதலில் ஆரம்பிக்கப்பட்ட தொழிற்சாலை விரிவடைந்ததா? அல்லது மூடப்பட்டு வேறு வகைத் தொழிற்சாலைகள ஆரம்பிக்கப்பட்டனவா? மக்கள் தொழிற்சாலைக்கு மதிப்பளித்தனரா? விவசாயத்திற்கு மதிப்பளித்தனரா? அரசியல் சூழ்நிலை என்ன? அரசு ஆதரவினால் தொழிற்சாலை வளர்ச்சி அடைந்ததா? அல்லது நசுக்கப் பட்டதா? மற்றும் தொழில் வளர்ச்சிக்குப் பிற ஆதரவுகள் கிடைக்கப் பெற்றனவா? என்பன போன்ற பலவேறு செய்திகளைச் சேகரித்து வைத்திருப்பார் அவற்றை எங்ஙனம் ஆராய்ச்சிக்கட்டுரை வடிவில் வடிக்க வேண்டுமென்பது பற்றி யாதொரு கருத்தும் கொண்டவராக இருக்க முடியாது. ஆகவே அவர் சேகரித்த மூல உண்மைக் கூறுகளை பல்முறையாகப் படித்து, வகைப்படுத்திய பின்னர்தான் ஆய்வுக் கட்டுரை எழுதத் தொடங்க வேண்டும். மேறகூறிய உதாரணத்தில் குறிப்பிட்டுள்ள மூல உண்மைக் கூறுகளைக் கீழ்க்கண்டவிதமாக வகைப்படுத்திக் கட்டுரை அமைக்கலாம்.

1. சென்னை நகரின் வளர்ச்சி
2. மக்களின் இயல்பு, அன்னியர் குடியேற்றம்
3. அரசியல் சூழ்நிலையும், மக்கள் முன்னேற்றமும்
4. பொருளாதாரமும் தொழிற்சாலையும்

5. தொழிற்சாலை மயமாதல்

6. நிறைவுரைகள்

இவ்வாறு ஆறு தலைப்புக்களாக, அதாவது ஆறு வகைகளாக மூல உண்மைக்கூறுகளைப் பிரித்துக் கட்டுரையாக வடிக்கலாம். இதுதான் பொதுவாக மூல உண்மைக்கூறு பகுப்பின் முக்கியத்துவம் ஆகும். ஆனால் ஆய்வுக்கட்டுரை எழுதுவதில் சிரமமான பகுதி மூல உண்மைக்கூறு பகுப்புத்தான் என்பதை அறியவும்.

ஆய்வாளர்கள் மூல உண்மைக்கூறுகள் பகுப்பின் போது கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகளாவன:

1. மூல உண்மைக்கூறுகள் பகுப்பிற்கு ஏற்ற வண்ணம் வசதியாகச் செய்ய, ஒரு பக்கம் மட்டுமே தாளில் எழுதுதல் வேண்டும்.

2. மூல உண்மைக் கூறுகள் வகைப்படுத்தப் பட்ட பின்னர், அத்தனை வகைகளுக்கும் அகர வரிசையில் பெயர்களிட வேண்டும்.

3. அகர வரிசையில் பெயர்களிட்ட பின்னர் மூல உண்மைக்கூறு வகையை முறையாக வளர்ச்சிப் பின்னணியில் அல்லது பொருத்த மான வகையில் வரிசைப்படுத்த வேண்டும்.

4. வளர்ச்சிப் பின்னணி மற்றும் பொருத்தமான வகையில் வரிசைப் படுத்துகின்ற பொழுது, மிக முக்கியமான கருத்துக்கள் மற்றும் பிற நிகழ்ச்சிகள் போன்றவை உட்தலைப்பின் உபதலைப்புக்களாக மாற வாய்ப்புண்டு. அவ்

வாறு அமைகின்ற உட்தலைப்பிற்கு அகர வரிசையில் சிறிய எழுத்தில் பெயர்களிட வேண்டும். இவ்உபதலைப்பிற்குப் பொருத்த மான கருத்துக்களுக்கு முறையே எண்கள் கொடுக்கப்பட்டு விட்டால், கருத்துக்கள் கோர்வையாகக் கிடைக்க வழி பிறக்கும். கட்டுரையை யாதொரு சிக்கலுமின்றி எளிதா கவும் சிறப்பாகவும் எழுதி முடித்துவிடலாம். உதாரணமாக, மேற்குறிப்பிட்ட ஆறுதலைப்பு களுக்கு **'அ ஆ, இ, ஈ, உ, ஊ'** எனப் பெயர் வைத்ததாக எண்ணிக்கொள்ளுங்கள். முதல் தலைப்பு 'சென்னை நகரின் வளர்ச்சி' என்று உள்ளது. அதில் உபதலைப்புக்களாக சென்னை முதலில் இருந்த நிலை, அன்னியர்களின் குடியேற்றத்தால ஏறபட்ட மாற்றம், உதவிய பல்வேறு காலக்கட்டங்கள் மற்றும் இன்றைய நிலை ஆகியவறறைப பொதுவான உபதலைபபுக்களாக ஏற்றுக்கொள்ளலாம். இவை முறையே **'அ, ஆ, இ, ஈ'** ஆகும். சென்னை முதலில் இருந்த நிலைக்கும் அன்னி யர்களின் குடியேற்றத்தால ஏறபட்ட மாற் றத்திற்குமிடையே உள்ள கருத்துரைகளை வரிசைப்படியாக **1, 2, 3, 4, 5, 6** என எண் களிட வேண்டும். **'அ'** தலைப்பில **'அ'** உட்பிரி விறகும் **'ஆ'** உட்பிரிவிற்கும் இடையே உள்ள கருத்துக்களுக்கு **'அ** அ1. **அ** அ2, **அ** அ3, **அ** அ4 என வரிசைப்படுத்தி எழுதிக்கொள்ள வேண் டும். இதே மாதிரியாக அடுத்துவரும் தலைப்புக் களுககும் எழுதிக் கொள்ள வேண்டும். இவ்வாறு பெயர்கள் இட்ட பின்னர், எளிதாக

எந்தத் தலைப்பையும் எழுத முடியும். இருப்பினும் ஒன்று இரண்டு என வரிசைப்படியாகத் தான் கட்டுரையை எழுத வேண்டும். நான் காவது தலைப்பு என்றால ஈஈ$_1$ ஈஈ$_2$ ஈஈ$_3$ என வரிசையாக இருக்குமல்லவா? ஆகவே இம் முறையைக கடைப்பிடித்தால் நன்றாக இருக்கும்.

# 5. ஆயவேட்டின் அமைப்பு

ஆய்வாளர் தம் ஆய்வின் மூலம் கண்டுபிடித்த ஆய்வு உண்மைகளை ஆய்வேடாக பல்கலைக் கழகத்திற்கு அளிக்கின்றார். பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப்படும் ஆய்வேடு சீராகவும், செம்மையாகவும், சிறந்ததாகவும் அமைய வேண்டும். ஆய்வு நெறிமுறைகளைப் பின்பற்றி ஆய்வு உண்மைகளை ஆய்வுக் கட்டுரையாக எழுதி ஆய்வேடு அமைக்கப்படுகிறது. ஆய்வில் ஈடுபடும் ஆய்வாளர் பொதுவாக ஆய்வேட்டின் அமைப்புப்பற்றி அறிதல் வேண்டும். பொதுவாக ஆய்வேடு மூன்று பகுதிகளைக் கொண்டதாக அமைக்கப்படுகிறது. அப்பகுதிகளாவன :

1. ஆய்வேட்டின் முன்பகுதி
2. ஆய்வேட்டின் உடற்பகுதி
3. ஆய்வேட்டின் பின்பகுதி

என்பன. சில பாடப்பிரிவுகளில் அளிக்கப்படும் ஆய்வேடுகளில் ஆய்வேட்டின் முன்பகுதியும் ஆய்வேட்டின் உடற்பகுதியும் மட்டுமே அமைதல் உண்டு. ஆய்வேட்டின் பின்பகுதி இடம் பெறுவதில்லை. பாடப் பிரிவுகளைப் பொறுத்தும் எடுத்துக் கொண்ட ஆய்வுத் தலைப்புக்கும் ஏற்ப ஆய்வேட்டின் பின்பகுதி இடம் பெறுகிறது. இனி ஒவ்வொரு பகுதிகளைப் பற்றியும் விளக்கமாகக் காண்போம்.

## ஆய்வேட்டின் முன்பகுதி

ஆய்வேட்டின் முன்பகுதியில் அடங்கக் கூடியவைகளாவன :

1. முதல் பக்கம்
2. வழிகாட்டியின் சான்றிதழ்
3. நன்றியுரை
4. பொருளடக்கம்
5. அட்டவணைகளின் பட்டியல்
6. குறுக்க விளக்கப் பட்டியல்
7. ஆய்வுக் கட்டுரை அறிமுகம்

என்பனவாகும்.

## முதல் பக்கம்

ஆய்வேட்டின் முதல் பக்கச் செய்திகள் மட்டுமே அச்சில் அமைகின்றன. மேற்பகுதியில் ஆய்வுக் கட்டுரையின் தலைப்பும், மத்தியப் பகுதியில் எப்பல்கலைக் கழகத்திறகு, எந்தப் பட்டத்திற்காக, யாரால் அளிக்கப்பட்டது என்பனவும், கீழ்ப்பகுதியில் ஆய்வாளர் ஆய்வு மேற்கொண்ட துறையின் பெயர், பல்கலைக் கழகத்தின் பெயர், ஆய்வேடு பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப்பட்ட மாதம் ஆண்டு ஆகியனவும் இடம் பெறுகின்றன.

உதாரணம் : திரு, ஆர் சண்முகசாமி என்பவர் 1967 ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அளித்த "National Movemets in Madras Presidency with Special Reference to V. O. Chidambaram Pillai" என்ற ஆய்வேட்டின் முதல் பக்க அமைப்பை, அடுத்த பக்கத்தில் காணலாம்.

# National Movements in Madras Presidency with Special Reference to V. O. Chidambaram Pillai

Thesis submitted to the University of Madras
for the Degree of Master of Letters

By
**Shanmugasamy**

Department of Politics and Public Administration
University of Madras
April 1977

## வழிகாட்டியின் சான்றிதழ் :

ஆய்வுக்கு வழிகாட்டியாக அமைபவர் கொடுக்கும் சான்றிதழ் வழிகாட்டியின் சான்றிதழ் அல்லது மேற்பார்வையாளர் சான்றிதழ் என அழைக்கப் பெறுகிறது. வலப்பகுதியில் இடம், தேதி ஆகியனவும், நேர் இடப் பகுதியில் வழிகாட்டியின் பெயரும், அவரது பட்டங்களும், பதவிப் பெயரும், துறைப் பெயரும், பல்கலைக் கழகத்தின் பெயரும், பல்கலைக்கழகம் அமைந்திருக்கும் ஊர்ப் பெயரும் இடம் பெறுதல் வேண்டும். சான்றிதழின் உடற்பகுதியில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வாளர் பெயர், எப்பட்டத்திற்காக எக்காலப் பகுதியில் மேற்பார்வையாளர் ஆய்வாளருக்கு வழிகாட்டினுர் என்ற செய்திகளும், ஆய்வாளரின் முழு முயறசியால் ஆய்வேடு உருவாக்கப்பட்டது என்ற உறுதிமொழியும் இடம்பெற வேண்டும். சான்றிதழ் முடிவில் வலப் பகுதியில் மேற்பார்வையாளர் கையொப்பம் அமைதல் வேண்டும். உதாரணம் "மதுரைக்காஞ்சி—ஓர் ஆழ்வாய்வு" என்ற தலைப்பில் எம். பில். பட்டத்திற்காகச் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு 1978 ஆம் ஆண்டு மு. பொன்னுசாமி அவாகள் அளித்த ஆய்வேட்டின் மேறபார்வையாளர் சான்றிதழை அடுத்த பக்கத்தில் காணலாம்.

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் சென்னை-600005,
எம். ஏ., எம். லிட்., பிஎச். டி., 25—5—1978
தமிழ்ப் பேராசிரியர்,
தமிழ்த்துறைத் தலைவர்,
சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை-600005

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

"மதுரைக் காஞ்சி—ஓர் ஆழ்வாய்வு" என்னும் தலைப்புள்ள இவ்வாராய்ச்சிக் கட்டுரை சென்னைப் பல்கலைக் கழகத்தில எம். பில் பட்டம் பெறுவதற்காக என் மேற்பார்வையில் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை ஆராய்ச்சி மாணவர் திரு. மு. பொன்னு சாமி 1977 ஆகஸ்டு முதல் 1978 ஏப்ரல் வரை ஆய்வு நிகழ்த்தி எழுதியதாகும். இவ்வாராய்ச்சிக் கட்டுரை இதற்கு முன் வேறு பட்டத்திற்கோ ஆய்வரங்கிற்கோ அனுப்பப் பெறவில்லை என்பதற்கும் இஃது இவருடைய தன் முயற்சியின் பயன் என்பதற்கும் நான் சான்றிதழ் வழங்குகிறேன்.

கையொப்பம்
(சி. பாலசுப்பிரமணியன்)
மேற்பார்வையாளர்

## நன்றியுரை :

ஆய்வுக்கட்டுரையின் முன்பகுதியில் ஆய்வாளரின் உறுதி மொழியை அடுத்து அமைவது நன்றியுரையாகும்; ஆய்வுக் கட்டுரை உருவாவதற்குப் பல வகைகளில் உறுதுணையாக இருந்த அனைவருக்கும் ஆய்வாளர் நன்றி தெரிவிப்பது ஆய்வாளர்தம் கடமையாகும். அதுவே சிறந்த ஆய்வு நாகரிகமாகக் கருதப்படுகிறது. ஆய்வு செய்ய வாய்ப்பு நல்கிய பல்கலைக் கழகத்திற்கும், துறைத் தலைவருக்கும் அவ்வப்போது ஆய்வுத் தொடர்பான கருத்துரைகளையும் நூலகளையும் அளித்த ஆன்றோர்களுக்கும், நூலகத்தாருக்கும் ஆய்வாளர் தம் நன்றியினைத் தெரிவித்தலவேண்டும். ஆய்வுத் தொடர்பான எத்தகைய சிறிய உதவியாக இருப்பினும் அவ்வுதவி நல்கியவாகளுக்கு நன்றி தெரிவிபபது சிறந்த ஆய்வு அறமாகக் கருதப்படுகிறது. ஆய்வேட்டில் நன்றியுரை அப்பககத்தின் மேலிருந்து 12 வரிகள் தள்ளி ஆரப்பிக்கவேண்டும.

## குறுக்க விளக்கப் பட்டியல் :

ஆய்வேட்டின் அடிக்குறிப்பு, ஆய்வேட்டின் உடற்பகுதி ஆகியவற்றில் சுருக்கக் குறியீடுகளை ஆய்வாளர் பயன்படுத்தியிருந்தால் அவற்றை ஆய்வாளர் விளக்குதல் வேண்டும். சுருக்கத்தை அடுத்து புள்ளியிடுதல் வேண்டும். இக்குறுக்க விளக்கம் நன்றியுரைக்குப் பின்வரும், பொருளடக்கத்துக்கு முன்னரும் இடம் பெறுகிறது. உதாரணம் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு 1974 ஆம் ஆண்டு டாக்டர் மா. செல்வராசன் அவர்கள் அளித்த "பாரதிதாசன் ஒரு புரட்சிக் கவிஞர்" எனற ஆய்வேட்டின் இடம் பெற்ற குறுக்க விளக்கப் பட்டியலை அடுத்த பக்கத்தில் காணலாம்.

## குறுக்க விளக்கம்

(ஆய்வுரையில் பயன்படுத்தப் பெற்றுள்ள குறிப்புகளின் குறுக்க விளக்கம்)

| | |
|---|---|
| அ. சி. | ... அழகின் சிரிப்பு |
| இசை 1 | ... இசையமுது, முதல்பகுதி |
| இசை 2 | ... இசையமுது, இரண்டாவது பகுதி |
| இ. வீ. | ... இருண்ட வீடு |
| இ. இ. | ... இளைஞர் இலக்கியம் |
| எ. மு. | ... எதிர்பாராத முத்தம் |
| எ. இ. | ... எது இசை |
| க. பு. கா. | ... கண்ணகி புரட்சிக் காப்பியம் |
| க. இ. பா. | ... கதர் இரட்டினப்பாட்டு |
| கா. க. | ... காதலர் கடமையா |
| கா. நி. | ... காதலர் நினைவுகள் |
| கு. வி. | ... குடும்ப விளக்கு |
| கு. தி. | ... குறிஞ்சித் திட்டு |
| த. க. | ... தமிழச்சியின் கத்தி |
| தமிழ். | ... தமிழியக்கம் |
| தேன். | ... தேனருவி |
| பா. ப. | ... பாண்டியன் பரிசு |
| பா. ஆ. சூ. | ... பாரதிதாசன் ஆத்திசூடி |
| பா.க. 1. | ... பாரதிதாசன் கவிதைகள் முதல் தொகுதி |
| பா. க. 2. | ... பாரதிதாசன் கவிதைகள் இரண்டாவது தொகுதி |

| | |
|---|---|
| பா. க. 3 | ... பாரதிதாசன் கவிதைகள் மூன்றுவது தொகுதி |
| பா. ப. தி. | ... பாரதிதாசன் பன்மணித்திரள் |
| ம. வெ. | ... மணிமேகலை வெண்பா |
| மு. கா. | ... முல்லைக்காடு |
| சு. து. | ... ஸ்ரீசுப்பிரமணியர் துதியமுது |

## பிற

| | |
|---|---|
| கழகம் | ... திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1 |
| குறள் | ... திருக்குறள் |
| குறுந். | ... குறுந்தொகை |
| சிலம்பு. | ... சிலப்பதிகாரம் |
| தண்டி. | ... தண்டியலங்காரம் |
| புறம். | ... புறநானூறு |
| மணி. | ... மணிமேகலை |

## பொருளடக்கம் :

ஆய்வுப் பொருளுக்கேற்ப ஆய்வுக் கட்டுரையின் தலைப்புக்கள் அமைகின்றன. ஆய்வுக் கட்டுரையின் அறிமுகம், ஆய்வுத் தலைப்புக்கள், துணை நூற்பட்டியல், பின்னிணைப்புகள் ஆகியவற்றைப் பொருளடக்கத்தில் முறையாகக் குறித்தல் வேண்டும். ஒவ்வொரு தலைப்பின் ஆரம்பப் பக்கமும் முடிவுப் பக்கமும் அவ்வத் தலைப்பிற்கு நேராகக் குறித்தல்வேண்டும். தலைப்பு எண்களை முறைப்படி குறிக்கவேண்டும். உதாரணம் டாக்டர் T. கல்யாணி என்பவரால் 1978 ஆம் ஆண்டு "The Adminstration of th Madras City Municipal Corporation and State Control ver it" என்ற ஆய்வுத் தலைப்பில் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப் பட்ட ஆய்வுரையின் பொருளடக்கத்தினை அடுத்த பக்கத்தில் காணலாம்.

## ஆய்வுக் கட்டுரை அறிமுகம்

ஆய்வுக் கட்டுரையின் முன்பகுதியில் இறுதியாக அமையக்கூடியதாகும். சில ஆய்வுக் கட்டுரைகளில் ஆய்வுக் கட்டுரையின் உடற்பகுதியின் முதலாவது பிரிவாக அமைதலும் உண்டு. பல்கலைக் கழகங்கள் எம். பில் ஆய்வேடுகள் 100 பக்கங்களுக்கு மிகாமலும், பி. எச். டி. ஆய்வேடுகள் 250 பக்கங்களுக்கு மிகாமலும் இருக்க வேண்டுமென வரையறுத்துள்ளதால் அறிமுகம் ஆய்வுக் கட்டுரைகளுக்கேற்ப, ஆய்வேட்டின் முன் பகுதியின் இறுதியிலோ அல்லது ஆய்வேட்டின் உடற்பகுதியின் முதலிலோ அமைகிறது. ஆய்வுத் தலைப்பின் முக்கியத்துவம், சிறப்பு போன்றவற்றை அறிமுகத்தில் சுட்ட வேண்டும். ஆய்வுக் கட்டுரையின் நுழைவாயிலாக அமையும் அறிமுகம் ஆய்வினைத் தொடங்கி வைப்பதோடு ஆய்வுச் சிக்கலையும் அறிமுகப் படுத்துகிறது. ஆய்வுச் சிக்கல் பற்றிய விளக்கம், அதின் பகுப்பு, ஆய்வு மூல உண்மைக் கூறுகள் பற்றிய விளக்கம், ஆய்வாளர் உருவாக்கிய அனுமானம், கருதுகோள்கள் பற்றிய விளக்கம், பின்பற்றிய அணுகு முறைகள் பற்றிய விளக்கம் ஆகிய அனைத்தும இரத்தினச் சுருக்கமாக அறிமுகப் பகுதியில் இடம் பெறுதல் வேண்டும்.

## ஆய்வேட்டின் உடற்பகுதி (The Body of the Thesis)

ஆய்வேட்டின் மையப்பகுதியாக அமைவது சில ஆய்வுக் கட்டுரைகளில் ஆய்வின் அறிமுகம் இப் பகுதியில் அமைவதுண்டு. பொதுவாக இப்பகுதியை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. ஆய்வு அறிமுகம்
2. ஆய்வுப் பகுதி
3. நிறைவுரை

என்பன. ஆய்வு அறிமுகம் பற்றி முன்னர் கண்டோம். ஆய்வுப் பகுதி ஆய்வேட்டின் உடற்பகுதியின் முதலிலோ, அல்லது மையப்பகுதியிலோ, ஆய்வு அறிமுகம் ஆய்வேட்டில் அமையும் இடத்தைப் பொறுத்து அமைகிறது. இப்பகுதியே ஆய்வேட்டின் முதுகெலும்பாகும். எடுத்துக்கொண்ட ஆய்வுப் பொருளுக்கேற்ப ஆய்வுப் பகுதி எழுதப்பட்டிருக்கும். ஒவ்வொரு தலைப்பும் பல உட்தலைப்புக்களாகப் பிரிக்கப் பட்டிருக்கும். ஆய்வேட்டின் உடற்பகுதியான இப்பகுதியை எழுதும்போதுதான் ஆய்வாளர் தம் முழுக் கவனத்தையும் செலுத்த வேண்டும். ஆய்வாள ரின் நடை செம்மையாகவும், அழகாகவும், கருத்துத் தொடர்புடையதாகவும் அமைத்தல் வேண்டும். அலங் கார நடையைத் தவிர்க்க வேண்டும். சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் வண்ணம் நடையின் சிறப்புத் துலங்குதல் வேண்டும். கருத்துப்பிழை, எழுத்துப் பிழை, இலக்கணப் பிழை போன்ற பிழைகளைத் தவிர்த்தல் ஆய்வேட்டின் செம்மைக்கு வழிகாட்டி யாகும் என்பதை ஆய்வாளர்கள் நினைவில் கொள்ளுதல் நலம் பயக்கும். சீரான தொடரமைப்புக் களும் முறையான பத்தியமைப்புக்களும் அமைய வேண்டுமென்பதில் ஆய்வாளர் தனிக் கவனம் செலுத்தல் வேண்டும். மேற்கோள்களையும்[1], அடிக் குறிப்புகளையும்[2] ஆய்வு முறைகளைப் பின்பற்றி ஆய்வுப் பகுதியில் அமைத்தல் வேண்டும்.

ஆய்வுப் பகுதியின் தொகுப்புரையாக அமைவதே நிறைவுரையாகும். ஆய்வில் கண்டுபிடிக்கப்பட்ட உண்மைகளைச் சுருக்கமாக உரைப்பதாகும். ஆய்வில் ஏற்பட்ட சிக்கல், சிக்கல் தீர்வு காணப்பட்ட விதம், ஆய்வாளர் மேற்கொண்ட அணுகுமுறை, ஆய்வாளர்

ஆய்வு மேற்கொண்ட ஆய்வுப் பொருளில் மேற்கொண்டு ஆய்வு எம்முறையில் நிகழ்த்தலாம் என்ற விவரங்கள் ஆகியனவற்றை முறைபபடி நிறைவுரையில் ஆய்வாளர் தொகுத்துரைக்க வேண்டும். நிறைவுரை ஆய்வுப் பகுதியின் மதிப்பீடாக அமைதல் சிறப்பானது.

**ஆய்வேட்டின் பின்பகுதி :**

ஆய்வேட்டின் பின்பகுதியில் கீழ்வருவன இடம் பெறுகின்றன.

1. துணைநூற்பட்டியல்[3] (Bibliography)
2. பின்னிணைப்புகள்[4] (Appendices) என்பன.

**துணைநூற்பட்டியல் :**

துணைநூற்பட்டியல் ஆய்வுக் கட்டுரையின் உடற்பகுதிக்குப் பின்னும், பின்னிணைப்புகளுக்கு முன்னும் அமைய வேண்டும். ஆய்வுக்கடடுரைககு பயன்பட்ட நூல்கள், கட்டுரைகள் முதலியன இடம் பெறுகின்றன. துணைநூற்பட்டியல் மூல உண்மைக் கூறுகளுக்கேற்ப வகைப்படுத்தப்பட்டு அமைக்கப் பெறுவதுண்டு.

**அ. அடிப்படை மூலங்கள் :**

1. சாசனங்கள் (Documents), தொகுப்புக்கள், அறிவுரை கோரல்.
2. நாட்குறிப்புகள், வழிவிபரம் தரும் நூல்கள்
3. கலைக் களஞ்சியம்.
4. விவரத் தொகுப்புச்சுவடிகள், மற்றும் அரசிதழ்கள்.

5. கையேடுகளும் வருடாந்திர நூல்களும்.

6. குறிப்பேடுகள் மற்றும் நினைவூட்டுக்கள்

7. அறிக்கைகள் (Reports)

8. அரசாங்கச் சட்டங்கள்

என்பன.

## ஆ. இரண்டாம்நிலை மூலங்கள் :

1. நூல்கள்

2. கட்டுரைகள்

3. பருவ வெளியீடுகள்

4. மலர்கள்

5. செய்தித்தாள்கள்

என்பன மேற்கண்ட முறையில் மூல உண்மைக் கூறுகளின் அடிப்படையில் துணை நூற்பட்டியலை அமைக்கலாம்.

## பின்னிணைப்புக்கள் :

ஆய்வுக் கட்டுரையில் இடம்பெறாத ஆய்வோடு நெருங்கிய தொடர்புள்ள செய்திகள் பின்னிணைப்புக்களாக இடம் பெறுகின்றன. இணைக்கப்படும் பின்னிணைப்புக்கள் ஒவ்வொன்றிற்கும் தக்க பெயரிட்டு முறைப்படி எண்ணிட்டு, இவைகளை ஆய்வேட்டின் முன்பகுதியில் இடம்பெறும் பொருளடக்கத்தில் குறிக்க வேண்டியது இன்றியமையாதது. இதில் அட்டவணைகள், விளக்கப்படங்கள், வரைபடங்கள், ஆசிரியர் பெயர் அகரவரிசை, கலைச்சொல் அகராதி என்பனவும் இடம் பெறுகின்றன.

---

1, 2, 3, 4 பற்றி பின்வரும் தலைப்புகளில் தெளிவாக விளக்கப் பெறுகின்றன.

# 6. துணை நூற்பட்டியல்

## (Bibliography)

ஆய்வேட்டின் இன்றியமையாத பகுதியாக துணை நூற்பட்டியல் விளங்குகிறது. ஆய்வாளருக்குச் சிறப்பாகப் பயன்படக்கூடிய வகையில் விளங்குகிறது. துணை நூற்பட்டியலுக்குத் தமிழில் ஆய்வடங்கல், கருவி நூற்பட்டியல, பார்வை நூற்பட்டியல் என்ற வேறு பெயர்களும் உண்டு. துணை நூற்பட்டியலின் அமைவிடம், அமைக்கும் முறை, வகைகள், பயன்கள் பற்றி விளக்கமாகக் காண்போம்.

### அமைவிடம்

துணை நூற்பட்டியல் ஆய்வேட்டில் இரு இடங்களில் இன்றைய நிலையில் இடம் பெற்று வருகின்றது.

1. ஆய்வேட்டின் உடற்பகுதிக்கும் பின்னிணைப்புகளுக்கும் இடையிலும்.
2. பின்னிணைப்புகளில் இறுதியிலும் என இரு இடங்களில் இடம்பெற்று வருகின்றது.

ஆய்வேட்டின் உடற்பகுதியை அடுத்து துணை நூற்பட்டியல் இடம் பெறுவதே சிறப்பானது.

### அமைக்கும் முறை :

துணை நூற்பட்டியல் (1) ஆசிரியர் பெயர் அகர வரிசையிலும் (2) நூல்களின் காலவரிசைப்படியிலும்

ஆக இரு முறைகளாக அமைக்கப்படுவதுண்டு. ஆசிரியர் பெயர் அகரவரிசையில் துணைநூற்பட்டியலை அமைப்பதே சிறப்பானது, காலவரிசைப்படி அமைக்கும்போது அவ்வாறு அமைப்பதன் நோக்கம், பயன் ஆகியவற்றை விளக்குதல் வேண்டும். இன்றைய நடைமுறையில் ஆசிரியர்பெயர் அகர வரிசையில் துணைநூற்பட்டியலை அமைக்கும் முறையே பின்பற்றப்பட்டு வருகின்றது. ஒரு ஆசிரியரின் இரண்டு மூன்று நூல்களை குறிப்பிட வேண்டியிருந்தால் மட்டுமே அவற்றைக் கால வரிசைப்படி எழுத வேண்டும்.

## துணைநூற்பட்டியலில் இடம் பெறுவன :

நூல்கள், கட்டுரைகள், உரையாடல், வானொலி/ தொலைக்காட்சி உரைகள், நூலின் மதிப்புரை, பேட்டிகள் போன்றவைகள் துணை நூற்படடியலில் இடம் பெறுகின்றன.

## துணை நூற்பட்டியலை வகைப்படுத்தும் முறை :

துணை நூற்பட்டியலை இரண்டு முறைகளில் வகைபபடுத்தி அமைக்கலாம். அவைகளாவன.

1. மூல உண்மைக்கூறுகளின் அடிப்படையிலும்,
2. நூல்கள், கட்டுரைகள், பேட்டிகள், வானொலி/ தொலைக்காட்சி உரைகள், அறிக்கைகள் கலைக்களஞ்சியம் என வரிசைப்படுததியும்,

ஆக இரண்டு முறைகளில் வகைப்படுத்தி அமைக்கப்படுவதுண்டு. மூல உண்மைக் கூறுகளின் அடிப்படையில் வகைப்படுத்துகின்ற பொழுது துணைநூற்பட்டியல் அடிப்படை மூல உண்மைக்கூறுகள், இரண்

டாம் நிலை மூல உண்மைக் கூறுகள் என இரண்டாகப் பிரிக்கப்படுகின்றது.

வரலாற்று ஆய்வுகளைப் பொறுத்தவரை ஏராளமான ஆவணங்கள், அறிக்கைகள், கல்வெட்டுக்கள், அரசாங்கச் சட்டங்கள், நாட்குறிப்புக்கள், விவரத் தொகுப்புச் சுவடி, அரசிதழ்கள். தொகுப்புக்கள், அறிவுரை கோரல், கையேடுகள், குறிப்பேடுகள், நினைவூட்டுகள், வருடாந்தர நூல்கள் எனப் பல்வேறு மூலக் கூறு ஆதாரங்களைப் பார்க்க வேண்டி வரும். இதே மாதிரியாக அரசியல் தலைவர்கள் பற்றிய ஆயவு மேற்கொள்ளப்பட்டு இருந்தால், மேறபடி தலைவர்கள் எழுதிய கையெழுத்துப்படிகள், கடிதங்கள, எழுதிய நூல்கள் போன்றவை மூலக்கூறு ஆதாரங்கள் பட்டியலில் இடம்பெறும். துணை நூற்பட்டியல் தயாரிக்கும பொழுது, கவனமாக ஆயந்து வரிசைபபடுத்த வேண்டும்.

## துணை நூற்பட்டியலின் வகைகள் :

துணை நூற்பட்டியல் நவீனக் கலை மாதிரியாகப் பல்வேறு வகைகளில் எடுத்தாளப்படுகிறது. துணை நூற்பட்டியல் அமையும் முறையைப் பொறுத்து ஆங்கிலேய முறை, அமெரிக்க முறை மற்றும் இந்திய முறை எனப் பலமுறைகளாக அமைகின்றது.

உதாரணமாக பதிப்புச் செய்யப்பட்ட ஆண்டு.

1. ஆசிரியர் பெயரை அடுத்தும்
2. நூற்பெயரை அடுத்தும்
3. நூல் வெளியீட்டை அடுத்தும்
4. இறுதியாகவும்

என நான்கு இடங்களில் எழுதப்பட்டு வருகின்றது.

இதே மாதிரியாகப், பதிப்பும் பல இடங்களில் இடம் பெற்று வருகின்றது. பதிப்பானது.

1. நூற்பெயரை அடுத்தும்,

2. வெளியீடான இடப்பெயரை அடுத்தும்,

3. இறுதியிலும்

எனமூன்று இடங்களில் எழுதப்பட்டு வருகின்றது.

இவ்வாறு துணைநூற்பட்டியலில் அடங்கப் பெறுகின்ற செய்திகள் அனைத்தும் வசதியின் பொருட்டோ, பழக்கத்தின் பொருட்டோ பல்வேறு இடங்களில் அமைக்கப்பட்டு வருகின்றது.

துணைநூற்பட்டியல் பல வகைகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது. அதன் தன்மையையும், இயல்பையும் கணித்து துணைநூற்பட்டியல் வகை செய்யப்படு கின்றது. துணைநூற்பட்டியலின் வகைகளாவன:

1. செயல் விவரத்தொகுப்பு
(Working Bibliography)

2. மேற்கோள் துணைநூற்பட்டியல்
(Annotated Bibliography)

3. தேர்வு துணைநூற்பட்டியல்
(Selected Bibliography)

என்பனவாகும்,

## செயல் விவரத் தொகுப்பு :

ஆய்வுத் தலைப்பைத் தேர்ந்தெடுத்ததும், ஆய்வுத் தொடர்பான மூல உண்மைக் கூறுகளைச் சேகரிபபதற் கென முதலில் உருவாக்கப்படும், துணைநூற்பட்டியல், செயல் விவரத் தொகுப்பு எனப் பெயர் பெறும். இத் துணைநூற்பட்டியல் பொதுவாக ஆய்வுத் தலைப் பிறகுத் தொடர்பான நூல்கள், ஆய்வேடுகள் போன்ற

வற்றில் இடம்பெற்றுள்ள துணைநூற்பட்டியலை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்படுகின்றது. தலைப்பிற்குத் தொடர்பாகத் தென்படுகின்ற கட்டுரைகள், இடம்பெறும் இதழ்கள், மலர்கள் போன்றவைகளும் அவ்வப்போது இத்துணைநூற்பட்டியலில் உள்ளடக்கப்படுகின்றன. இதுதான் ஆய்வின் முன்னோடியும், முதன்மையும், முதுகெலும்பும் ஆகும். எந்த அணுகு முறையை ஆய்வில் கடைப்பிடிக்க வேண்டும், எம்முறையில் சிக்கல்களைத் தீர்வுகாண வேண்டும், எத்தகைய முடிவுகளை ஊறுதிப்படுத் முடியும் என்பன போன்ற நிலைகளில் ஆய்விற்கு உறுதுணையாக ஆய்வின் தொடக்கத்தில உருவாக்கப் படுவதே செயல் விவரத் தொகுப்பு ஆகும். ஆய்வினை எளிதாக்குவதும், ஆய்விற்கு வழி காட்டியாக இருப்பதும், அத்துணைநூற்படடியலே ஆகும். இதுவே ஆய்வினைச் சீராக, செம்மையாக செய்ய வழி கோலுவதுடன், இறுதியாக ஆய்வேட்டின் துணைநூற்பட்டியலாகவும் மலர்கின்றது.

**மேற்கோள் துணைநூபட்டியல் :**

ஆய்விறகுப் பயன்பட்ட அனைத்து நூல்களும், கட்டுரைகளும் மற்றும் பிறவும் இதிலடங்கும. இதன் மூலம் ஆய்வாளர் என்னென்ன நூல்களை தம் ஆய்விற்குப் பயன்படுத்தினர் என்பதை அறிந்து கொள்ளலாம். மேற்கோள் துணைநூற்பட்டியலை வைத்து ஆய்வினை ஓரளவு மதிப்பாய்வு செய்து விடலாம். ஆய்வுத் தலைப்பிறகுப் பொருத்தமான ஆழமான கருத்தடங்கிய நூல்கள் பலவுண்டு- அத்தகைய ஆழக்கருத்துக்கள் நிறைந்த நூல்கள் இடம்பெறவில்லையேல், ஆய்வாளர் சில முக்கியமான நூல்களை ஆய்வுக்குப் பயன்படுத்தாமல் விட்டுவிட்டார் என்பதை எளிதில் இத்துணை

நூற்பட்டியலைக் கொண்டு அறிந்து கொள்ள லாம்.

**தேர்வு துணைநூற்பட்டியல்:**

ஆய்வு திறம்பட அமைய ஆய்வுத் தொடர்பாக ஏராளமான நூல்களும், கட்டுரைகளும் மற்றும் பிறவும் பயன்படுகின்றன. ஆய்வாளரின் ஆய்வின் அனுமானத்தை நிரூபிக்க வைக்கும் நிலையில் பயன் படுகின்ற அனைத்து நூல்களையும் பிறவற்றையும் துணைநூற்பட்டியலில் அடக்குவது கடினம். ஆகவே ஆய்வாளர் தமது ஆய்வுக்கு எடுத்தாண்ட நூல்களில் முக்கியமான நூல்களையும், கட்டுரைகளையும், பிற வற்றையும் தேர்ந்தெடுத்து இத்துணைநூற்பட்டியலை உருவாக்குகின்றனர். இதுவே தேர்வு துணைநூற்பட் டியல் (Selected Bibliography) என்று அழைக்கப்படு கின்றது.

துணைநூற்பட்டியலில் இடம்பெறும் ஒவ்வொரு நூலின் முழு விபரமும் கொடுக்கப்பட வேண்டும். நூலைத் துணைநூற்பட்டியலில் அமைக்கும்போது

1. ஆசிரியர் பெயர்
3. நூலின் பெயர்
3. வெளியீடு
3. இடம்
5. பதிப்பு
6. ஆண்டு

என்ற முறைப்படி அமைத்தல் வேண்டும்.

(உ-ம்) Anderson, J. THESIS AND ASSIGNMENT WRITING wiley Eastern Private Limited, New Delhi, Reprint, 1971.

இனி துணைநூற்பட்டியலில் ஆசிரியர் பெயர், வெளியீடு, இடம், பதிப்பு, ஆண்டு போன்ற நூலைப் பற்றிய செய்திகளைக் குறிக்கும்போது ஆய்வாளர் மனதில் ஏற்படும் சந்தேகங்களை நீக்கும் வண்ணம் விளக்குவோம்.

## ஆசிரியர் பெயர் :

பழனிசாமி கவுண்டர், வளங்கொழிக்கும் தமிழகம், அணில் பதிப்பகம், சென்னை, இரண்டாம் பதிப்பு 1978 என்று ஒரு நூலைப் பற்றிய முழுமையான செய்திகள் கிடைக்கப் பெற்றதாக வைத்துக் கொள்வோம். இதைத் துணைநூற்பட்டியலில் கவுண்டர், பழனிச்சாமி வளங்கொழிக்கும் தமிழகம், அணில் பதிப்பகம் சென்னை, இரண்டாம் பதிப்பு, 1978 என்று சிலர் எழுதக்கூடும். ஏனெனில் பெயரைவிட இனப்பெயரை முன்னரும் ஆசிரியர் பெயரைப் பின்னரும் எழுது கின்றனர். கண்டிப்பான வரையறுக்கப்பட்ட ஒழுங்கு விதிகள் இல்லாத காரணத்தால் அவ்வாறு செய்து வருகின்றனர். ஆசிரியர் பெயர் மட்டுமே முன்னர் இடம் பெறவேண்டும்.

ஊர்ப்பெயருடன் ஆசிரியர் பெயர் இருந்தால், துணைநூற்பட்டியலில் ஆசிரியர் பெயரை அடுத்து ஊரப் பெயரை எழுதுதல் வேண்டும்

(உ–ம்) உடுமலை ப. கண்ணப்பன், என இருந்தால் துணைநூற்பட்டியலில் கண்ணப்பன், ப, உடுமலை.,

என எழுத வேண்டும்.

நூலாசிரியர் சிறப்புப் பட்டங்கள் ஏதேனும் பெற்றிருந்தால், அவற்றைப் போட வேண்டுமென்பது

அவசியமில்லை. உதாரணமாக திரு. செ. மணியன் என்று இருந்தால, அதனை மணியன், திரு. செ., என்று எழுதுவது போல்தான் புலவர், நாவலர், டாக்டர் போன்ற பட்டங்களைச் சேர்ப்பதுமாகும். ஆசிரியரின் பெயர் மட்டும்தான் தேவையே தவிர ஆசிரியரின் பட்டங்களும், மதிப்புச் சொற்களும் தேவையில்லை. உதாரணமாக அமைச்சர் ஒருவர் நூல் எழுதியிருந்தால் அவரது பெயருக்கு முன் இடம்பெறும் மதிப்புச் சொல்லை சேர்க்க வேண்டியதில்லை.

(உ-ம்) மாண்புமிகு அ. க. சிவசாமி, என்று இருந்தால் துணை நூற்பட்டியலில் சிவசாமி, அ. க.,

என எழுதினால் போதுமானது. சிவசாமி மாண்புமிகு, அ. க. என எழுத வேண்டியதில்லை பட்டம் பதவிகளையோ, மரியாதைச் சொற்களையோ துணை நூற்பட்டியலில் எழுதி மதிப்பையோ, மரியா தையையோ பெறவோ, கொடுக்கவோ ஆய்வாளர் விழைதல் கூடாது.

கட்டுரைகளின் தொகுப்பு நூலாக இருந்தால் தொகுப்பாசிரியர் பெயரை அடுத்து அடைப்புக் குறியினுள் தொகுப்பாசிரியர் எனக் குறிக்க வேண்டும். மொழிபெயர்ப்பு நூலாக இருந்தால் ஆசிரியர் பெயரை அடுத்து அடைப்புக் குறியினுள் மொழிபெயர்ப்பாளர் எனக் குறிக்க வேண்டும். ஒரு நூலை இரு ஆசிரியர்கள் எழுதியிருந்தால் இரு ஆசிரியர்கள் பெயரையும் குறிக்க வேண்டும். இரு ஆசிரியர்களுக்கு மேல் ஒரு நூல் எழுதபபட்டியிருந்தால் அந்நூலில் முதலாவதாக இடம் பெறும் ஆசிரியர் பெயரை மட்டும் எழுதி தொடர்ந்து முதலியோர் என எழுத வேண்டும். உதாரணமாக முரளி, முருகன், மதியழகன் என இருந்தால்

முரளி, முதலியோர்., என எழுதினால் போதுமானது ஆங்கிலத்தில் முதலியோர் என்பதற்குப் பதிலாக 'Slet-al' என எழுத வேண்டும். ஆசிரியரின் உண்மையான பெயர் கொடுக்கப்படாமல் புனைப்பெயர் மட்டும் கொடுக்கப்பட்டிருந்தால் நூலில் உள்ளபடி புனை பெயரை எழுதி அடைப்புக்குறியினுள் புனைபெயர் எனக் குறிக்க வேண்டும். உதாரணமாக,

இனியன், (புனைபெயர்) என எழுத வேண்டும். கவிஞர்தாசன் என்பது ஆசிரியரின் புனைபெயராக இருந்தால் கவிஞர்தாசன் என அப்படியே எழுதிவிட வேண்டும். தாசன், கவிஞர்., எனப் புனைப்பெயரைப் பிரித்து எழுதக் கூடாது.

## நூலின் பெயர்

ஆசிரியரின் பெயரை அடுத்து நூலின் பெயர் அமைய வேண்டும். நூலின் பெயரை அடிக்கோடிட்டுக் காட்ட வேண்டும்.

(உ-ம்) Fuller. L. L., THE MORALITY OF LAW Fawcolt Publications, Inc., New york, 1964.

நூல் பல தொகுதிகளாக வெளிவந்திருந்தால் நூல் பெயரை அடுத்து எத்தொகுதி என்பதையும் குறிப்பிட்டு நூற்பெயர், தொகுதி இவற்றை அடிக்கோடிட்டுக் காட்டவேண்டும்.

Thurston, E., CASTES AND TRIBES OF SOUTHERN INDIA VOL. IV

## வெளியீடு, இடம், பதிப்பு, ஆண்டு :

வெளியீடு அல்லது வெளியீட்டாளர் என்பது நூற்பெயரை அடுத்து அமைய வேண்டும். அதனை அடுத்து வெளியிடப்பட்ட இடமும், பதிப்பும், ஆண்டும்

இடம் பெற வேண்டும். பதிப்பிக்கப்பட்ட இடம் குறிப் பிடப்படாமல், இருந்தால் 'இடம் இல்லை' (இ.இ.) என எழுதிவிட வேண்டும். ஆண்டு இல்லாமலிருந்தால் 'ஆண்டு இல்லை' என எழுத வேண்டும் பொதுவாக அனைத்து நூல்களிலும் வெளியீடு அல்லது பதிப்பகம் இடம் பெறுவது உண்டு. சில நூல்களில் வெளியீடு அல்லது பதிப்பகம் கொடுக்கப்படாமல் அச்சிட்டோர் மட்டுமே இருந்தால் அச்சிட்டோரை எழுதி விடலாம். நூல்கள் பல பதிப்புக்களாக வந்துகொண்டு இருப் பதால், ஆய்விற்குப் பயன்படுத்திய நூல் எந்தப் பதிப்பு எனபதைக் குறிப்பிடவேண்டும். ஒவ்வொரு பதிப்பும் வளர்ச்சியை உள்ளடக்கி வெளியிடப்படு வதால் இறுதியாக வெளிவந்த பதிப்பினைக் கட்டாய மாகப் பார்க்க வேண்டும். 1955ம் ஆண்டில் முதல் பதிப்பாக வந்த நூல், 1978ம் ஆண்டில் 6வது பதிப்பாக வந்திருக்கலாம். முதல் பதிப்பில் இடம் பெறாத புதுச் செய்திகள் 6வது பதிப்பில் சேர்க்கப்பட்டிருக்கலாம். அசசெய்திகள் ஆய்வாளருக்கு அவசியமாகக்கூட இருக்கலாம். எனவே ஆய்வாளர் கட்டாயமாக 6வது பதிப்பையோ அல்லது 5வது பதிப்பையோ பார்க்க வேண்டும். மாறாக 1955ம் ஆண்டில் வெளி வந்த முதல் பதிப்பைப் பார்த்திருந்தால் மிகுதியான பயன் தராது.

## கட்டுரைகளை அமைக்கும் விதம்:

இதழ்கள், மலர்கள், போன்றவற்றிலிருந்து எடுக் கப்படும் கட்டுரைகளைத் துணைநூற்பட்டியலில் அமைக்கும்விதம், நூலகளை அமைக்கும் விதத்திலிருந்து சிறிது வேறுபட்டதாகும். கட்டுரையை அமைக்கும் முறை வருமாறு:

1, கட்டுரை ஆசிரியர் பெயர்

2. கட்டுரையின் பெயர்

3. இதழின் பெயர்

4. இதழின் எண், துணை எண்

5. வெளியீடு

6. வெளியான இடம்

7. வெளிவந்த மாதம், ஆண்டு என்ற முறையில் எழுத வேண்டும்.

(உ-ம்) கட்டுரைகளைப் பொறுத்த அளவில் ஆய்வாளர் கவனிக்க வேண்டிய சில விதிமுறைகளாவன:

1. கட்டுரையின் தலைப்பினை மேற்கோள் குறியீடு செய்ய வேண்டும்.

2. இதழின் பெயரை அடிக்கோடிட்டுக் காட்ட வேண்டும்.

3. கட்டுரை இடம்பெற்ற பக்கங்களை (முதல்—இறுதி) குறிப்பிடுதல் நலம்.

தினசரிகளிலிருந்து கட்டுரை எடுக்கப் பட்டால், ஆசிரியர் பெயர், கட்டுரையின் பெயர், தினசரியின் பெயர் (அடிக்கோட்டில்), வெளியான இடம், தேதி மாதம், ஆண்டு ஆகியவற்றைக் குறிப்பிடவேண்டும்.

## உதாரணங்கள்

1. ஆசிரியர் ஒருவராக இருந்தால்,
சண்முகராமன், க., **மேல் நிர்வாகமும் அதன் கோட்பாடுகளும்,** அன்பர் பதிப்பகம், காரைக்குடி, 1976.

2. ஆசிரியர் இருவராக இருந்தால்,

பழனிவேல், இராம., கணேசன், மா., அறிவியலும், சமூக மாற்றங்களும், ஔவை பதிப்பகம், மாயவரம், 1974.

3. மூன்றும் அதற்கு மேற்பட்ட ஆசிரியர்கள் இருக்கப் பெற்றால், தமிழில்,

பழனிசாமி, மு., மற்றும் பிறர். தமிழில் சிறுகதை வளர்ச்சி, எழில் பதிப்பகம், சேலம், 1966. ஆங்கிலத்தில்,

Pugh, D. S., et. al. (ed.) Writers on Organization, Penguin Books Middlessex second edition, 1971.

4. ஆசிரியர் பெயர் தெரியவில்லை யென்றால் ஒரு சிறு கோடு இட்டு கீழ்க்கண்ட முறையில் எழுதவும்.

—The Promise of America, Houghton Miffin Company, Boston, 1966.

இவ்வாறு ஆசிரியர் பெயர் தெரியாத நூலை துணை நூற்பட்டியலில் ஆசிரியர் பெயர் அகர வரிசையின் இறுதியில் சேர்க்க வேண்டும்.

5. ஆசிரியரும் பதிப்பாசிரியருமாக இருவர் இருந்தால்,

Wyss, Johann., The Swiss Family Rabinson (ed. by) william H. G. Kingston. Grosset and Dunlop, New york, 1949.

6. பதிப்பாசிரியர்கள் கருத்துக்கள் இடம் பெற்றிருக்குமாயின் எழுத வேண்டிய முறை,

Mc Clay, Harriet, L., and Helin Jedson (Eds.) Storp Essays, (Revised ed.) Rinehart and winstor, Inc. New York, 1947.

7. நூலினைச் சுருக்கி வெளியிடப் பட்டால் எழுத வேண்டிய முறை,

ஆசிரியர் பெயர், நூற்பெயர், சுருக்கியவர் பெயர், வெளியீடு, இடம், ஆண்டு.

Bosswell, James., Life of Johnson, by charles Osgood (Abr.) Scribners, New York, 1945.

8. மொழி பெயர்ப்பு நூலாக இருந்தால்,

ஆசிரியர் பெயர், நூற்பெயர், எம்மொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது, மொழி பெயர்ப்பாளர், வெளியீடு, இடம், பதிப்பு, ஆண்டு.

Vansina, Jan., Oral Tradition : A Study in Historical Methodology. (Trans.) French by H. M. Wright Aldine Chicago, 1965.

9. நூலானது மாற்றங்கள் செய்யப்பட்டு புதிய அறிமுகத்துடனும், புதிய அத்தியாயங்களுடனும் வெளியிடப்பட்டால், மேற்படி மாற்றங்கள் செய்தவர் பெயரையும் குறிப்பிட வேண்டும்.

ஆசிரியர் பெயர், நூற்பெயர், மாறுதல் செய்தவர் பெயர், வெளியீடு, இடம், ஆண்டு.

Strunk, william, The Elements of Style with revisions, an introduction and a new chapter on writing by E. B. White, Macmillan, New, York, 1972.

10. நூல்கள் பல வரிசைகளாக வெளிவந்திருந்தால் இன்ன வரிசை என்பதைக் குறிப்பிட வேண்டும். இது நூற்பெயரை அடுத்து இடம்பெற வேண்டும்.

ஆசிரியர் பெயர், நூற்பெயர், வரிசை வெளியீடு, இடம், பதிப்பு, ஆண்டு,

Singhvi, L. M., (Ed.) Parliament and Administration of India, The Institute of constitutional and Parliamentary Studies, Metropolitian Book Co., New Delhi, 1972.

11. நூல்பற்றி விளக்கம் அளிக்கப்பட்டிருந்தால்,

ஆசிரியர் பெயர், நூற்பெயர், விளக்கம் அளித்தவர் பெயர், வெளியீடு, இடம், ஆண்டு ஆகியன இடம்பெற வேண்டும்.

12. கலைக் களஞ்சியம் எழுதும் முறை,

கலைக்களஞ்சியத்தின் பெயர், தொகுதி, தொகுத்தவர் பெயர், வெளியீடு, இடம் ஆண்டு.

ENCYCLOPAEDIA BRITANNICA VOL. 14. William Benton (Ed.), Chicago, 1968.

வாய்மொழியாகப் பெற்ற மூலக்கூறுகளின் நூற்பட்டியல் எழுதும் முறை: பேட்டி, விரிவுரை, வானொலிச் செய்திகள், தொலைக்காட்சி நிலையச் செய்திகள் ஆகியனவற்றை எவ்வாறு துணைநூற் பட்டியலில் எழுதுவது என்பது பற்றிப் பார்ப்போம.

1. பேட்டியெனில், பேட்டியளித்தவர் பெயர், பதவி, பேட்டியின் தலைப்பு, இடம், தேதி.

மனுநீதிச்சோழன், மாவட்ட ஆட்சித் தலைவர், சமுதாய வளர்ச்சித் திட்டம், உதகமண்டலம் நவம்பர் 6, 1971,

2. விரிவுரையெனில்,

விரிவுரை நிகழ்த்தியவர்கள் பெயர், விரிவுரையின் தலைப்பு, விரிவுரை நடந்த இடம். தேதி.

மணியன், செ., இயக்குநர், சுழற்சித் திட்டமும் பொருளாதார முன்னேற்றமும், கலைவாணர் அரங்கம், சென்னை, டிசம்பர், 27, 1978.

3. வானொலி/தொலைக்காட்சி உரையெனில், உரையாற்றியவர் பெயர், பதவி, வானொலி/தொலைக்காட்சி நிகழ்ச்சி தலைப்பு; இடம், தேதி
குமாரசாமி, கு. மருத்துவர், நாட்டு நலமும் குடும்பக் கட்டுப்பாடும், தொலைக்காட்சி நிலையம் சென்னை, செப்டம்பர் 23, 1976.

4. துண்டுப் பிரசுரங்களெனில்,
ஆசிரியர், தலைப்பு, பதிப்பு, வெளியிட்ட இடம், ஆண்டு.

## துணைநூற்பட்டியலின் பயன்கள்

1. ஆய்வாளர் எங்கெந்த நூல்களிலிருந்து தமது ஆய்வுக்கு அடிப்படை, இரண்டாம் நிலை மூல உண்மைக் கூறுகளைத் திரட்டினார் என்பதை அறியப் பயன்படுகின்றது.

2. ஆய்வேட்டினைப் படிப்போர் மேலும் சில விளக்கங்களை அறிய, நூலைப்பற்றிய முழு விவரங்களையும் துணை நூற் பட்டியல் மூலமாக அறிந்துகொள்ள உதவுகிறது.

3. ஆய்வாளர் தம் ஆய்வுக்கு மேற்கொண்ட உழைப்பின் உன்னதச் சிறப்பினைப் புலப் படுத்துகிறது.

4. பின்வரும் ஆய்வாளருக்கு செயல்முறை துணை நூற் பட்டியலை உருவாக்கப் (Working Bibliography) பயன்படுகின்றது.

துணை நூற்பட்டியலில் அமைக்கும்போது ஆய் வாளர் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகளாவன :

1. துணை நூற்பட்டியல் ஆசிரியர் பெயர் அகர வரிசைபபடி முறையாக அமைந்துள்ளதா? என்பதைக் கவனிக்க வேண்டும்.

2. நூலின் பெயர் கோடிடப்பட்டுள்ளதா?

3. கட்டுரைத் தலைப்பு மேற்கோளுக்குள்ளும், அது இடம்பெற்ற மலர் அல்லது இதழின் பெயர் அடிக்கோடி டப்பட்டும் உள்ளனவா?

4. முறைப்படி குறியீடுகள் இடம் பெற் றுள்ளனவா?

5. தொகுதி எண், பதிப்பு, வெளியீடு பற்றிய விவரங்கள் போன்றவை முறைப்படி குறிக்கப் பட்டுள்ளனவா?

என்பன போன்ற கேள்விகளை மனதில் எழுப்பி, துணை நூற்பட்டியலைச் சிறப்பாக அமைக்க ஆய்வாளர்கள் விழைதல் வேண்டும்.

# 7. சுருக்க விளக்கங்கள்

விளக்கங்களை முழுமையாக எழுதாமல் சிறு குறியீடுகள் அல்லது சிறிய அளவில் அடையாளக் குறியீடுகள் அமைப்பதே சுருக்க விளக்கமாகும். ஆய்வேட்டின் சிறப்புக் கருதியே இக்குறியீடுகள் கையாளப் படுகின்றன. சுருங்கக்கூறி விளங்க வைப்பதுதான் சுருக்க விளக்கத்தின் நோக்கமாகும். இக்குறியீடுகள் அடிக்குறிப்புக்கள், துணைநூறபட்டியல் மற்றும் ஆய்வில் தேவையான இடங்களில் பயன்படுத்தப் படுகின்றன.

| எண் | சுருக்கம் | விளக்கமும் உதாரணமும் |
|---|---|---|
| 1 | anon. | "anonymous" (used when the author is not known). |
| | ஆ. இ. | ஆசிரியர் பெயர் தெரியவில்லையானல் —— எனக் கோடிட்டுக் காட்டித் தலைப்பு எழுதலாம் அல்லது ஆசிரியர் இல்லை என எழுதிவிட வேண்டும். |
| 2. | Art. | Article. |
| | கட். | கட்டுரை (உ-ம். கட். 3) என்பது கட்டுரை 3, என்பதைக் குறிக்கும். |
| 3. | [ ] | brackets |
| | | அடைப்புக்குறி, மேற்கோளில் மாற்றம் அல்லது விளக்கம் அளிக்க |

வேண்டியவரின் [ ] இக்குறியீட்டினுள் எழுதிக் காட்ட வேண்டும்.

4. C. "Copyright"

ப.உ. "பதிப்புரிமை" துணைநூற் பட்டியலில் ஒரு குறிப்பிட்ட நூலின் பதிப்பித்த ஆண்டு கொடுக்கப்படாமலோ அல்லது தெரியாமலோ இருந்தால் பயன்படுத்தலாம்.

5. cf. "Confer" Compare (e.g., of Table 6 on page 40)

ஒ.பா. ஒப்பிட்டுப் பார்க்க.

ஆய்வில் சில செய்திகளை ஒப்பிட்டுப் காண வேண்டிய சூழல் உருவாகும் பொழுது இக்குறியீடு பயன்படுத்தப் படுகிறது. செய்திகள் சில அட்டவணையாகவும் இடம்பெறல் கூடும். அப்பொழுது "ஒப்பிட்டுப் பார்க்க" என விளக்கமாக எழுதாமல் ஒ. பா என்ற சுருக்கக் குறியீட்டைப் பயன்படுத்துகிறோம்.

(உ-ம்) "ப. 40ல் உள்ள அட்டவணை 6 ஒ. பா."
எனக் காட்டலாம்.

6. C. or ca. "circa";

ஏ. கு. ஏறக்குறைய

தொல்பொருள் துறை. வரலாறு சம்பந்தப்பட்ட ஆய்வுகளில் இக்குறியீடு இடம் பெறுதலுண்டு. ஆண்டு

இன்னதெனத் துல்லியமாகக் கூற இயலாதபோது ஏ. கு. எனச் சுட்டி, அடுத்து ஆண்டைக் குறிக்க வேண்டும்.

Chap. "Chapter"
Chap (s) "Chapter (s)"
அத் "அத்தியாயம்"
(உ-ம்.) அத். 2
எனக் குறிக்கலாம்.

8. ed. "Editor–edition"
பதி நூலகள பல பதிப்புக்களாக வருதலுண்டு. ஆய்வில் பயனபடுத்தப்பட்ட நூல எபபதிபபு என்பதைக குறிப்பிடும்போது 'பதி'. என்ற குறியீடு பயன்படுததப்படுகிறது.

(உ-ம்) 7 ஆம் பதி எனக்குறிக்கலாம். பலரது கட்டுரைகளைச் சேர்த்து நூலொன்று பதிப்பாசிரியர் ஒருவரால உருவாக்கபபட்டிருந்தால் இக்குறியீடு சுட்டபபடுதலுண்டு. தமிழில் செய்யுள் நூலகள் ஒரு பதிப்பாசிரியரால வெளியிடப்பட்டிருத்தல் கூடும். அப்போது இக்குறியீடு பயனபடுதலுண்டு.

உ. வே. சாமிநாதையர், (பதி.), எனக் குறிக்கலாம்.

9. e.g. "exempli gratia" ; for example
உ-ம் உதாரணம்

(அல்லது)

எ. கா. எடுத்துக்காட்டு

ஆய்வில் கருத்துக்களுக்கு விளக்கமளிக்கும் போது உதாரணம் (அல்லது) எடுத்துக்காட்டு காட்டுதல் உண்டு. அவ்வாறு காட்டும்பொழுது உதாரணம் என்பதை (உ-ம்) எனச் சுருக்கமாகவும், எடுத்துக்காட்டு என்பதை (எ. கா) எனச் சுருக்கமாகவும் எழுதலாம்.

10. et al. "et alii"; and others

ம.பி. மற்றும் பிறர்

மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட ஆசிரியர்கள் ஒரு நூலை எழுதியிருப்பின் அந்நூலில் இடம்பெறும் முதற் பெயரை எழுதி அதன் பின்னர் ம. பி. என்ற குறியீட்டைக் கையாளலாம். (உ-ம்) குருசாமி, ம.ரா.போ., ம. பி.

12. f., ff. "the page, pages following."

ப. தொ. பக்கத் தொடர்ச்சி

ப.தொடர். பக்கமும் தொடரும் பக்கங்களும்.

ஆய்வுக் கட்டுரையில் இடம்பெறும் மேற்கோள் பகுதி எடுக்கப்படும் நூலில் ஒரு பக்கமும் அதற்கு அடுத்த பக்கத்திலும் தொடர்ந்தால் ப.தொ. எனக் குறிக்கலாம்.

மேற்பட்டுத் தொடர்ந்தால் ப. தொடர் எனக் குறிக்கலாம்.

(உ-ம்) பக்கம் 278ம் அடுத்துவரும் பக்கமும் என்பதை
ப. 278 ப. தொ.
எனக் குறிக்கலாம்.
பக்கம் 278ம் தொடரும் பக்கங்களும் என்பதை
ப, 278 ப. தொடர்.
எனக் குறிக்கலாம்.

13. Fig Figure
Fig(s) "Figure(s)"
ப-ம் படம்

அறிவியல் சம்பந்தப்பட்ட ஆய்வேடு களில் விளக்கப் படங்கள் இடம் பெறுதலுண்டு. படம் என்பதை ப-ம் எனக்குறிக்கலாம்.

14. Ibid "Ibidem" : in the same place or work
மே.ப. "மேற்படி"
ஆய்வில் அடிக்குறிப்புகளில் இக் குறியீடு பெருமபாலும் இடம்பெறுத லுண்டு. ஒரு நூலிலிருந்து மேற் கோள் எடுத்தாண்டபின் அதற்கு அடுத்து வரும் மேற்கோளும் அதே நூலிலிருந்து எடுத்தாண்டால் அடிக் குறிப்பில் மீண்டும் ஆசிரியரின் பெயரையும் நூற்பெயரையும் எழு தாமல் மே.ப. என்ற குறியீட்டைப் பயன்படுத்தலாம். வித்தியாசமாகப் பக்கங்கள் இருந்தால், பக்க எண் களைக் குறிக்க வேண்டும். அடுத்த

மேற்கோளும் அதே நூலில் அதே பக்கத்திலிருந்து எடுக்கப்பட்டால் மே.ப. என்றும் பக்கம் மாறுபட்டால் மே.ப. ப. 81 (மேற்படி பக்கம் 81) என்றும் குறிப்பிட வேண்டும்.

உ-ம். முதல் மேற்கோள்:
சி. பாலசுப்பிரமணியன், கட்டுரை வளம், ப. 21

அடுத்து வரும் மேற்கோள் அதே நூல் அதே பக்கம் | மே. ப. எனக்குறிக்க வேண்டும்.

பக்கம் மாறுபட்டால்
மே. ப. ப. 81
எனக் குறிக்க வேண்டும்,

பக்கங்களின் ஆரம்பத்தில் முத லாவதாக 'ibid' என எழுதக்கூடாது.

15. Idem "the same" (used when a footnote refers to the same work and the same page as the previous footnote,

அ.யே. அப்படியே

பயன் படுத்தபபட்ட நூலினைத் தொடர்ந்து, அந்த நூல் பயன் படுத்தப்படடு, மேற்படி, பக்கமே பயன்படுத்தினால் 'அப்படியே' என்று எழுத வேண்டும்.

(உ-ம்.) கண்ணன், ம., சட்டமன்றம் செயல்படும் முறை, ப. 61

அ. யே. என எழுதினால் மட்டுமே போதுமானது.

16. i.e. "id est"; that is

அ.து. அதாவது

17. infra below

நூ. பி. "நூலின் பின்னர்" எனக் குறிக்கலாம். இக்குறியீடும் அடிக்குறிப்பில் இடம் பெறுவதாகும். மேற்கோள் ஆண்ட நூலிலிருந்தே அடுத்துவரும் மேற்கோளும் ஆனால் அதே நூலின் பின்னர் வரும் பக்கத்திலிருந்து எடுக்கப்பட்டிருந்தால்.

நூ. பி,, ப. 108

எனக் குறிக்கலாம்.

18. Op. cit. "Opera citato"

மு. நூ. In the work cited quoten முன்னர் காட்டிய நூலிலிருந்தே மேற்கோளைக் கையாண்டால் நூலாசிரியர் பெயரை எழுதி அடுத்து இக்குறியீடு மு. நூ. தந்து பக்கத்தைக் குறிக்கவேண்டும். வ. சுப. மாணிக்கம், மு. நூ., ப. 84.

19. l. "lir e"

ll. "Lines"

அ. (அல்லது) வ. அடி அல்லது வரி

அ.ள். (அல்லது)

வ.ள். அடிகள் அல்லது வரிகள்

20. [sic] "thus"

மூ.ப. மூலப்படி
மேற்கோள் பகுதியில் எழுத்துப் பிழை (Spelling error), இலககணப் பிழை (grammer error) கருத்துப்பிழை (fact error) இருந்தால் அதைத் திருத் தாமல் பிழையை அடுத்து [மூ.ப.] எனக்குறித்து [மூ.ப. சரியானது இன்னதென்பதைக் குறிக்க.]

"அரசு கலவி [மூ.ப. கல்வி] துறைக் காக இநநிதியாண்டில் 20 லட்சம் செலவிட்ட போதிலும்..."

கலவி என்பது தவறு

கல்வி என்பதே சரி.

21. Supra "above"

நூ.மு. "நூலின் முன்னர்"

அடிக்குறிப்பில் இக்குறியீடும் சுட் டப் பெறுதலுண்டு. மேற்கோள் காட்டப் பெறும். நூலிலிருந்தே அடுத்துவரும் மேற்கோளும் அதே நூலின் முன்னர் உள்ள பக்கத்தி லிருந்து ஆளப்பட்டிருந்தால்,

Supra, ப. 34.

நூ. மு. ப. 34

எனக் குறிக்கலாம். நூற்பெயருக்குப் பதிலாக இக்குறியீடுகள் மேற் சொன்ன நெறி முறைகள் அடிப்படை யில் சுட்டப்படுகின்றன என்பதைக் கவனிக்க வேண்டும்.

| | | |
|---|---|---|
| 22. | loc. cit. | Loco Citato, in the place cited. |
| | மு. ப. | முன்னுள்ள பக்கம். |
| | | இதுவும் அடிக்குறிப்பில் பயன்படு கிறது. ஒரு நூலிருந்து மேற்கோளை எடுத்தாண்டு பல பக்கங்களுக்குப் பிறகு அதே நூலில் அதே பக்கத் திலிருந்து மேற்கோளை மீண்டும் காட்டினால் ஆசிரியர் பெயரை அடுத்து இக்குறியீடுதந்து பக்கத்தை யும் குறிக்க வேண்டும். |
| | | ஞானசேகரன், மு.ப., ப, 88 |
| 23. | P. | Page |
| | PP. | Pages |
| | ப. | பக்கம். |
| | பக். | பக்கங்கள் |
| | | ஒரு பக்கம் என்பதை ப. என்ற குறி யீட்டாலும் பல பக்கங்கள் என்பதை பக். என்ற குறியீட்டாலும் குறிக் கலாம். |
| 24. | Passim | here and there |
| | இ. அ. | இங்குமங்கும். |
| 25. | Pt. | Part |
| | பகு. | பகுதி |
| | Pts | Parts |
| | ப.ள் | பகுதிகள் |
| 26. | Vs | "Versus"; against |
| | எ | எதிராக |

# 8. அடிக்குறிப்புகள்

(FOOT NOTES)

இன்றைய ஆய்வு நிலையில் ஆய்வேட்டின் அடிக் குறிப்பு எழுதும் முறையைப் பற்றி ஆய்வாளர் நன்கு தெரிந்திருத்தல் வேண்டும். அடிக்குறிப்பு அமையும் இடம், அடிக் குறிப்பும் எண்ணிடலும், அடிக்குறிப்பும் குறுக்க விளக்கங்களும், அடிக்குறிப்பில் மேற்கோளை ஆளும் விதம், அடிக்குறிப்பில் நூல், கட்டுரை போன்ற வற்றை அமைக்கும் முறை, அடிக்குறிப்பின் பயன்கள், ஆய்வாளர் கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகள் ஆகியன பற்றி ஈண்டுக் காணலாம்.

## அமையும் இடம்

இன்று அடிக்குறிப்புகளை ஆய்வேட்டில் மூன்று இடங்களில் ஆய்வாளர்கள் அமைத்து வருகின்றனர்.

1. அவ்வப்பக்கத்தின் கீழ்ப்பகுதியில் அமைத்தல்
2. ஒவ்வொரு இயலின் இறுதியில் அமைத்தல்,
3. ஆய்வுக்கட்டுரையின் உடற்பகுதியைஅடுத்து அமைத்தல், அதாவது அனைத்து இயல்களின் இறுதியில் அமைத்தல்,

என மூன்று இடங்களில் அமைக்கப்பட்டு வருகின்றது. ஒவ்வொன்றிலும் சில நடை முறைச் சிக்கல்கள் இருக் கின்றன. அடிக்குறிப்பு என்ற சொல்லின் விளக்கமே அவ்வப்பக்கத்தின் கீழ் இடம்பெறும் குறிப்பு என்ப தாகும். எனவே, இவ்வப்பக்கத்தில் அடிக்குறுப்பினை அமைத்தல் நலம். இம்முறையில் அடிக்குறிப்பினை

இடும் பொழுது ஆய்வாளரும், தட்டெழுத்தரும் மிகுந்த கவனம் செலுத்த வேண்டும். அடிக்குறிப்பு எண்களை முறைப்படி அமைக்க வேண்டும்.

ஒவ்வொரு இயலின் இறுதியிலும், அனைத்து இயல்களின் இறுதியிலும் அடிக்குறிப்பினை அமைக்கும் முறைகளும் இன்றைய நடைமுறையில் உள்ளன. இம்முறைகளால் தேர்வாளரும், ஆய்வேட்டைப் படிப்போரும் அடிக்குறிப்பைப் பார்க்க விழையும்போது பல பக்கங்களைப் புரட்டிப் பார்க்க வேண்டிய நிலை ஏற்படுகின்றது.

## அடிக்குறிப்பும் எண்ணிடலும்

ஒவ்வொரு பக்கத்திலும் அடிக்குறிப்பினை எழுதிச் செல்லும்போது அவ்வப்பக்கத்தில் இடம்பெறும் மேற்கோள்களுக்கு 1, 2, 3 என்றவாறு எண்ணிட்டு அடிக்குறிப்பில முறைப்படி குறிக்க வேண்டும். அடுத்த பக்கத்தில் இடம்பெறும் மேற்கோள்களுக்கும் 1, 2, 3 என எண்ணிட்டு, அப்பக்கத்தின் கீழ் அடிக்குறிப்பெழுத வேண்டும். இம்முறையில் அவ்வப்பக்க மேற்கோள்கள் கருத்துகள் அவ்வப்பக்க அடிக்குறிப்பிலேயே விளக்கம் பெறுகின்றன.

இயலின் இறுதியில் அடிக்குறிப்பிடும் முறையிலும் அனைத்து இயல்களின் இறுதியில் அடிக்குறிப்பிடும் முறையிலும் மேற்கோள்களும, பிறநூற்கருத்துகளும் ஒவ்வொரு இயலிலும் 1, 2, 3, 4, 5 என்றவாறு முறையாகத் தொடர் எணகளிடப்பட்டு முறையே அவ்வவ்வியலின் இறுதியிலோ அல்லது அனைத்து இயல்களின் இறுதியிலோ அடிக்குறிப்பில் விளக்கம் பெறுகின்றன.

## அடிக்குறிப்பும் குறுக்க விளக்கங்களும்

அடிக்குறிப்பில் தேவையான இடங்களில் குறுக்க விளக்கக் குறியீடுகளைப் பயன்படுத்த வேண்டும்.

| | | |
|---|---|---|
| Ibid | : மே. ப. | : மேற்படி |
| Op. Cit | : மு.நூ. | : முன்னர் காட்டிய நூல் |
| Loc. Cit | : மு.ப. | : முன்னுள்ள பக்கம் |
| p. (page) | : ப. | : பக்கம். |
| pp. (paegs) | : பக். | :பக்கங்கள் |

போன்ற குறியீடுகள் அடிக்குறிப்பில் பயன்படுத்தப்படு கின்றன. எவ்வாறு பயன்படுத்துவது என்ற விவரங் களை முன்னருள்ள இயலைப் பார்த்துத் தெரிந்து கொள்ளவும்.

## அடிக்குறிப்பில் மேற்கோள்

சில சமயங்களில் ஆய்வுப் பகுதியில் கருத்துகளைச் சுருக்கமாகக் கூறிவிட்டு, மூலத்தை அடிக்குறிப்பில் எழுதிக் காட்டுவதும் உண்டு. பிறமொழியிலுள்ள மூலச் செய்திகளை அடிக்குறிப்பில் எழுதிக்காட்டுவதும் உண்டு. இவ்வாறு அடிக்குறிப்பில் மூலக்கருத்தை எழுதும்போது " " என்றவாறு இரட்டை மேற்கோள் குறியீட்டினுள் குறிக்க வேண்டும்.

## நூலைக் குறிக்கும் விதம்

அடிக்குறிப்பில் நூலை எழுதும்போது,

1. ஆசிரியர் பெயர்
2. நூலின் பெயர் (அடிக்கோடிட வேண்டும்)
3. பதிப்பு
4. வெளியான இடம், ஆண்டு.
   (இவை அடைப்புக் குறியீட்டில் இடம்பெற வேண்டும். முதலில் ஒரு நூலைக் குறிப்பிடும் போது மட்டும் இவை இடம் பெறும். மீண்டும்

அதே நூலை அடிக்குறிப்பில் குறிக்கும் போது இடம், ஆண்டு தேவையில்லை.)

5. பக்கம்.

என்ற முறைப்படி எழுத வேண்டும்.

(எ-டு) மு. வரதராசன், இலக்கியத்திறன், இரண்டாம் பதிப்பு சென்னை, 1975,) ப. 179.

என முதலில் ஒரு நூலை ஆளும்போது அடிக்குறிப்பில் விவரமாக எழுத வேண்டும். அதே நூலை மீண்டும் அடிககுறிப்பில் குறிப்பிட வேண்டிய நிலை வரும் போது, ஆசிரியர் பெயர், நூற்பெயர், பக்கம் ஆகியன மட்டும் இடம்பெற்றால் போதுமானது.

மு. வரதராசன், இலக்கியத்திறன், ப. 186.

என எழுதினால் போதும்.

## ஆசிரியர் பெயர்

ஆசிரியர் பெயரை நூலிலுள்ளவாறு எழுதிவிட வேண்டும் நூலில்,மாங்காடு ப. சுபபிரமணிய முதலியார் என்றிருந்தால, அப்படியே எழுத வேண்டும். டாக்டர்' பேராசிரியர், புலவர் போன்றவை அடிக்குறிபபில் இடம் பெறக் கூடாது.

## நூலின் பெயர்

நூலின் பெயர் ஆசிரியர் பெயரை அடுத்து அமைய வேண்டும். நூற்பெயரை அடிக்கோடிட்டுக் காட்ட வேண்டும்.

## இடம், ஆண்டு

வெளியான இடம் ஆண்டு இவற்றை அடிக்குறிப்பில் குறிக்கும்போது, அடைப்புக் குறியினுள் குறிக்க வேண்டும்.

## பக்கம்

மேற்கோள் அல்லது கருத்து நூலின் எந்தப் பக்கத்திலிருந்து எடுக்கப்பட்டது என்பதைக் காட்டவே

நூலின் பக்கம் அடிக்குறிப்பில் இடம் பெறுகின்றது. மேற்கோள் செய்யுளாக இருந்தால், செய்யுள் எண், அடி எண்கள் ஆகியனவற்றைக் குறிக்க வேண்டும்.

## கட்டுரையை அமைக்கும் விதம்

கட்டுரையை அடிக்குறிப்பில் குறிக்கும்போது,

1. கட்டுரை ஆசிரியர் பெயர்
2. கட்டுரைத் தலைப்பு
   (மேற்கோள் குறியீட்டில் இடம் பெற வேண்டும்.)
3. கட்டுரை இடம் பெறும் நூல்
   (அடிக்கோட்டுக் காட்ட வேண்டும். பகும், தொகுதி இருந்தால் அவற்றிற்கும் அடிக்கோடிட வேண்டும்.)
4. வெளியான இடம், ஆண்டு.
   (இவற்றை அடைப்புக் குறியினுள் குறிக்க வேண்டும். முதலில் ஒரு கட்டுரையைக் குறிப்பிடும்போது மட்டும் இடம், ஆண்டு இடம்பெற வேண்டும. அதே நூற்கட்டுரையை மறுபடியும் குறிக்க வேண்டியிருப்பின் இடம்; ஆண்டு தேவையில்லை.)
5. பக்கம்

(எ-டு) பொன். கோதண்டராமன். 'பெயரிடைச் சொற்கள்', புலமை, 1–1,(சென்னை, சனவரி 1975), ப.76

## உதாரணங்கள்

1. ஆசிரியர் ஒருவராக இருந்தால்,

[1]வே. சிவசுப்பிரமணியன், மேல்நிர்வாகமும் அதன் கோட்பாடுகளும் (காரைக்குடி, 1976), ப. 89,

2. ஆசிரியர் இருவரெனில் இருவர் பெயரையும் எழுத வேண்டும். அடுத்து நூற்பெயர் (இடம் ஆண்டு), பக்கம் என்ற முறைப்படி எழுதுதல் வேண்டும்.

3. ஆசிரியர் இருவருக்குமேலெனில், முதலில் நூலில் இடம்பெறும் ஆசிரியர் பெயரை எழுதி ம.பி.,என்று எழுதவேண்டும்.

[2]ப. நடராசன், ம. பி., தமிழில் சிறுகதை வளர்ச்சி, இரண்டாம் பதிப்பு (சேலம், 1966), ப. 38.

4. சுருக்கமாக்கப்பட்ட நூலெனின், சுருக்கியவர் பெயர் இடம் பெறவேண்டும்.

ஆசிரியர் பெயர், நூற்பெயர், சுருக்கியவர் பெயர் (இடம், ஆண்டு), பக்கம்.

[3]James Boswell, Life of Johnson, abridged by Charles G. Osgood (New York, 1945), P. 168.

5. மொழிபெயர்ப்பெனில், மொழி பெயர்ப்பாளர் பெயர் இடம் பெற வேண்டும்.

[4]Jam Vansina Oral Trabition :A study in Historical Methodology, rans. from French by H. M. Wright (Chicago, 1965) P. 125.

6. நூலானது மாற்றங்கள் செய்யப்பட்டு புதிய அறிமுகத்துடனும், புதிய இயல்கள் சேர்க்கையுடனும் வெளியிட்டிருந்தால், மேற்படி மாற்றங்கள் செய்தவர் பெயரையும் குறிக்க வேண்டும்.

ஆசிரியர் பெயர், நூற்பெயர், மாறுதல் செயதவர் (இடம், ஆண்டு), பக்கம்.

[5]William Strunk, The Elements of Style, with revision, an introdoction and a chapter on writing by E.R. While (New York, 1972,) P. 23.

7. ஆசிரியர் பெயரும் பதிப்பாசிரியர் பெயரும் உள்ள நூலாக இருந்தால்,

Johann Wyss, The Swiss Family of Robinson, (Ed). William H. G. Kingston (NewYork, 1947), p. 25.

## கலைக்களஞ்சியம்

1. ஆசிரியர் பெயருள்ள கட்டுரையெனில், (Signed Article) கட்டுரை ஆசிரியர் பெயர், கட்டுரையின் பெயர், கலைக்களஞ்சியம், (ஆண்டு), பக்கம் என்ற முறைப்படி எழுத வேண்டும்.

[1]John Bell Condliffe, "Free Trade", Encyclopaedia Britannica (1968), P. 384.

2. ஆசிரியர் பெயரில்லாக் கட்டுரை (unsigneb Article) யெனில்,

"கட்டுரைத் தலைப்பு" கலைக்களஞ்சியம், (ஆண்டு), பக்கம். என்ற முறைப்படி எழுத வேண்டும்.

[2] "Gerard Ter Borch,", Encyclopedia Americana (1965), P. 422.

## ஆசிரியர் பற்றிய சில விளக்கங்கள்

பெரும்பாலான கலைக்களஞ்சியக் கட்டுரைகள் ஆசிரியர் பெயருடன் இருக்கும். ஒரு சில சிறிய கட்டுரைகள் ஆசிரியர் பெயரின்றி இருக்கலாம். சில கலைக்களஞ்சியங்களில் ஒவ்வொரு கட்டுரை முடிவிலும் ஆசிரியர் பெயரின் முதலெழுத்து மட்டும் இடம் பெற்றிருக்கலாம். முழுப்பெயர் வேறு இடத்தில் கொடுக்கப்பட்டிருக்கும். அதைப் பார்த்து கட்டுரை ஆசிரியரின் முழுப்பெயரை ஆய்வாளர் அறிந்து கொள்ளலாம்.

## பதிப்புகள், வெளியீட்டு வரிசைகள்

நூல்கள் பல பதிப்புகளாக வெளி வந்திருக்கலாம். பல பதிப்புள்ள நூலிலிருந்து குறிப்பெடுக்கும்போது அண்மையில் வெளிவந்த பதிப்பிலிருந்து குறிப்பெடுத்தல் வேண்டும். அடிக்குறிப்பில் எப்பதிப்பு என்பதைக் குறிக்க வேண்டும். சில நூல்களில் வெளியீடு வரிசை எண் இருந்தால் அதைக் குறிக்க வேண்டும்.

**1 பதிப்பெனில்**

[1] சி. பாலசுப்பிரமணியம், **தமிழ் இலக்கிய வரலாறு** பன்னிரண்டாம் பதிப்பு (சென்னை, 1978). ப 89.

**2. வெளியீட்டு வரிசை எண் எனில்**

[1] Frank N. Magill, ed., Magill's Quotations in Contexscr, 2nd Series (New York, 1969), P. 24

**வானொலி தொலைக்காட்சி உரைகள்**

**தனியொருவர் பேச்சு எனில்,**

உரை நிகழ்த்துபவர் பெயர், அவரது பொறுப்பு அல்லது பதவி, "பேச்சுத் தலைப்பு," வானொலி, தொலைக்காட்சி பேச்சு, நிலையம், இடம், மாதம், நாள், ஆண்டு.

அரங்க இராமலிங்கன், ஆய்வாளர், "பாரதிதாசனும் நகைச்சுவையும்," வானொலிப் பேச்சு, அகில இந்திய வானொலி நிலையம், சென்னை, ஏப்ரல் 29, 1979.

**அகராதிகள்**

**1. பொது அகராதிகள் எனில்,**

பதிப்பாளர் அல்லது வெளியிட்டாளர் பெயர் கொடுக்கத் தேவையில்லை.

[1]Websters Third Internotional Dictionary of the English Language : Unabridged (1961). P. 162.

2. சிறப்பு அகராதிகளெனில் (Specific Dictionary)
[2]Ralph Desola, ed., Abbreviations Dictionary rev. ed (New york, 1967), P. 51

3. மற்றும் பில ஆசிரியரல்லாத வெளியீடுகள் எனில்
[1]Hindustan Year Book (New Delhi, 1964), H. 51.

**செய்தித்தாள் செய்தி மலர்**

**செய்தித்தாளாக இருந்தால்,**

கட்டுரை ஆசிரியர் பெயர், தலைப்பு, செய்தித்தாள், இடம், மாதம் நாள், ஆண்டு, பக்கம்.

[1]Balraj Metha, "Rounding of the Budjet," Indian Express, Madras, April 27, 1979, P. 8

**செய்தித்தாளில் பதிவ்பு: பிரிவு கொடுக்கப்பட்டிருப்பின்,**

[2]Florence Mouckley, "On Working Vacations' Christian Science Monitar, Western editor, Aug. 28, 1971 Sec. I, P—I ,

செய்தி மலராக இருந்தால், செய்தித்தாளைக் குறிப்பது போலவே குறிக்க வேண்டும்.

[3]"A Search for Peace and understanding" U. S News and World Report, June 14, 1971, q. 19.

**இரண்டாம் நிலை மூலம் (Secondary Source)**

நாம் மேற்கோளாக ஆண்ட பகுதி எதிலிருந்து எடுக்கப் பட்டது என்ற விவரத்தோடு, முதல்நிலை மூல உண்மைக் கூறாக இடம் பெறும் நூலைப்பற்றிய விவ

ரங்களையும் கொடுக்க வேண்டும். முதல் நிலை, இரண்டாம்நிலை மூலங்கள் இடம் பெறும் இரு நூல்களின் பக்க எண்களையும் கொடுக்க வேண்டும்.

*George A Ellis, A Half-Century of the Unitarian Cantroversy, P. 86, as quoted in R. W. B. Lewis, The American Adam (Chicago, 1965), P. P 94—95

## இலக்கியங்கள்

### நாடகம்

ஆசிரியர் பெயர், நாடக நூற்பெயர், அங்கம் (Act) களம் (Scene), அடி எண் என்ற முறைப்படி குறிக்க வேண்டும்.

சுந்தரம்பிள்ளை, மனோன்மணியம் IV, *2 : 14—17.*

### புதினம்

புதினமாயின் புதின ஆசிரியர் பெயர், புதினப் பெயர், இயல் எண், பக்க எண் என்ற முறைப்படி குறிக்க வேண்டும்.

அகிலன், சித்திரப்பாவை, இ. *3*, ப. *86*.

### கவிதை

குறுந். 4 : *1—3.*

சிலப்பதிகாரம், காதை ×*111* அடி. *22—26*
குறள். *186*.

## அடிக்குறிப்பின் பயன்கள்

1. ஆய்வாளர் எங்தெந்த நூல்களிலிருந்து ஆய்வுக்குத் தேவையான கருத்துகளை எடுத்தாண்டுள்ளார் என்பதை அறியப் பயன்படுகிறது.

2. பிறமொழி நூல்களிலிருந்து மேற்கோளை எடுத்தாண்டால், மொழிபெயர்ப்பை ஆய்வுப் பகுதியில் எழுதிவிட்டு, பிறமொழி நூல் மூலக்கருத்தை அப்படியே தர அடிக்குறிப்புப் பயன்படுகிறது.

3. ஆய்வேட்டின் முன்னும் பின்னும் வெவ்வேறு இடங்களில் கூறிய கருத்துகளை ஓரிடத்தில் ஒப்பிட்டுக் காட்டவும், உறழ்ந்து காட்டவும் அடிக்குறிப்புப் பயன்படுகிறது.

4. இன்றியமையாத தேவையின்போது மூலத்தை அப்படியே தரவும் பயன்படுகிறது.

5. சில செய்திகளைத் தெளிவாக ஆய்வுப் பகுதியில் விளக்க முடியாத நிலை ஏற்படும்பொழுது, விளக்கம் தர இடம் தருவது அடிக்குறிப்பே ஆகும்.

6. ஆய்வுக் கட்டுரையிலுள்ள ஒரு செய்தியே பல இடங்களில் கொடுக்கப்பட்டிருந்தால் அதனைத் தெரிவிக்கவும் பயன்படுகிறது.

7. எடுக்கப்படும் •மேற்கோள், கருத்துகள் இடம் பெறும் நூலாசிரியருக்கு நன்றி தெரிவிக்கும் முகமாக அடிககுறிப்பு அமைகிறது.

8. ஆய்வாளரின் சிந்தனையோட்டமும், கருத்தோட்டமும் தடைபடாமல், சீரான முறையில் தெளிவாகக் கருத்துகளை ஆய்வுப்பகுதியில் எடுத்துக்கூற வழி வகுப்பது அடிக்குறிப்பே ஆகும்.

## அடிக்குறிப்பும் ஆய்வாளர் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகளும்

1. நூலிலுள்ளவாறே ஆசிரியர் பெயரை எழுத வேண்டும். டாக்டர், பேராசிரியர், புலவர் போன்ற சிறப்புப் பட்டங்களை அடிக்குறிப்பில் எழுதத் தேவையில்லை.

2. மேற்கோள் எண்களுக்கேற்ப முறைப்படி அடிக் குறிப்பிட வேண்டும்.

3. நூற்பெயரை அடிக்கோடிட்டுக் காட்ட வேண்டும். பகுதி, தொகுதிகள் இருந்தால் அவற்றிற்கும் அடிக்கோடிட வேண்டும்.

4. கட்டுரையாயின் கட்டுரையின் தலைப்பை " " என இரட்டை மேற்கோளுள்ளும், கட்டுரை இடம் பெறும் நூற்பெயரை அடிககோடிட்டும் அமைக்க வேண்டும்.

5. அடிக்குறிப்பில் மூலப்பகுதியை அமைக்கும் போது. இரட்டை மேற்கோள் குறியீட்டினுள் எழுத வேண்டும்.

6. குறுக்க விளக்கங்களைத் தேவையான இடங்களில் முறைப்படி பயன்படுத்த வேண்டும்.

7. அடிக்குறிப்பில் விளக்கம் அளிக்க வேண்டியிருப் பின் சுருக்கமாக விளக்கமளிக்க விழைதல் வேண்டும்.

8. அடிக்குறிப்பில் விளக்கம் அதிகமாக அளிக்க வேண்டியிருப்பின் அதைப் பின்னிணைப்பில் எழுது தல் நன்று. அடிக்குறிப்பில் இடம்பெற வேண்டிய விளக்கம் பின்னிணைப்பில் இருந்தால், அடிக்குறிப் பில் பின்னிணைப்பைப் பார்க்கவும் எனக்குறிப் பிட்டு, பின்னிணைப்பு எண்ணையும் குறிப்பிட வேண்டும்.

9. அடிக்குறிப்பு எழுதும் முறையை முதற்படி எழுதும் போதே தொடங்க வேண்டும்.

10. அடிக்குறிப்பை ஆளும் நெறிமுறைகளின் அடிப் படையில் அனைத்து அடிக்குறிப்புகளும் கையா ளப்பட்டுள்ளனவா? என்பதை ஆய்வேடு முழுமை யும் பார்த்துச் சரி செய்தல் வேண்டும்.

# 9. மேற்கோள்கள்

## (QUOTATIONS)

ஆய்வுக்கட்டுரையில் மேற்கோள்களை ஆய்வாளர் தம் கருத்துக்கு வலிவூட்டும் வகையில் எடுத்தாளுகின்றார். மேற்கோள்களை ஆய்வுக் கட்டுரையில் பயன் படுத்தும் போது, மூலத்தில் உள்ளவாறே எழுத வேண்டும். மேற்கோள்களை ஆய்வுக் கட்டுரையில் ஆளும் போது சில நெறிமுறைகளை ஆய்வாளர் அறிந்திருத்தல் வேண்டும். மேற்கோளின் நோக்கம், மேற்கோளுக்கு எண்ணிடும் விதம், மேற்கோளும் குறுக்க விளக்கக் குறியீடுகளும், செய்யுள், உரைநடை, கடிதம், மேற் கோளுக்குள் மேற்கோள் அமைக்கும் முறை ஆகியன பற்றிக் காண்போம்.

### மேற்கோள்களின் நோக்கம்

ஆய்வுக் கட்டுரையில் இன்றியமையாது தேவைப் படும் இடங்களில் மட்டுமே மேற்கோளை ஆய்வாளர் பயன்படுத்த வேண்டும்.

1. ஆய்வாளர் சில கருத்துகளை மிகவும் தெளிவு படுத்துகின்ற பொழுதும், தனது கருத்துகளை நிறுவுகின்ற பொழுதும் பிறருடைய கருத்துகளை மேற்கோளில் காட்டுகின்றார்.

2. ஆய்வுச் சிக்கலை அணுகி, நுணுகி ஆராயும்போது மூல உண்மைக் கூறுகள் (Sources) பிற அறிஞர் களின் கருத்துகள் ஆகியன ஏற்ற இடங்களில் மேற்கோளாகக் காட்டப்படுவதால் ஆய்வுச் சிக்கலைத் தீர்வு காண்பதும் உறுதிப்படுத்துவதும் எளிதாகின்றது.

3. மூல ஆசிரியரின் கருத்துகளை அப்படியே அறிந்து கொள்ள வேண்டும் என்ற நோக்கிலும் அப்படியே மேற்கோளில் அக்கருத்துகள் ஆளப்படுவதுண்டு.

## மேற்கோளின் வகைகள்:

மேற்கோள்களை அளவு அடிப்படையில் இரு வகைகளாகப் பிரிக்கலாம். அவையாவன:

1. சிறிய மேற்கோள் (Short Quotation)
2. பெரிய மேற்கோள் (Long Quotation)

என்பனவாகும். சிறிய மேற்கோள்கள் நான்கு வரிகள் வரை இருக்கக் கூடியனவாகும். பெரிய மேற்கோள்கள் பொதுவாக ஐந்து அல்லது அதற்கு மேற்பட்ட வரிகளுடன் கூடியனவாகும்.

## மேற்கோள் குறியீடுகள்

மேற்கோள்களை ஆய்வுப் பகுதியிலிருந்து நன்கு தெரியும் வண்ணம் மேற்கோள் குறியீட்டினுள் அமைத்துக் காட்ட வேண்டும்.

‘ ’ ஒற்றை மேற்கோள் குறியீடு.
“ ” இரட்டை மேற்கோள் குறியீடு.

என இருவகையான மேற்கோள் குறியீடுகள் பயன் படுத்தப்படுகின்றன.

## மேற்கோள் எண்ணிடல்

மேற்கோள் எதிலிருந்து எடுக்கப்பட்டது என்ற விபரங்களை அடிக்குறிப்பில் காட்ட வேண்டி, மேற்கோள் முடிவில் மேற்கோள் குறியீட்டினை அடுத்து சற்று மேலே தள்ளி எண்ணிட வேண்டும். அடிக்குறிப்புகள் அமையும் இடத்திற்கேற்ப எண் வரிசையை முறையாகக் கையாளவேண்டும்.

(எ-டு)

"சுவை முளையும் சுவையும் வேறு வேறாக இருக்கமுடியாது என்பதும்,சுவை என்ற சொல்லைத் தொல்காப்பியர் பயன்படுத்தா விட்டாலும் சுவை முளையினையே (ஸ்தாயீபாவம்) தொல்காப்பியர் மெய்ப்பாடு எட்டு எனக் கூறி இருக்க வேண்டும் என்றும் தோன்றுகிறது"

## மேற்கோளும் குறுக்கவிளக்கக் குறியீடுகளும்

மேற்கோளில் தேவையான இடங்களில் சில குறுக் விளக்கக் குறியிடுகள் பயன்படுத்தப்படுவதுண்டு.

1. மேற்கோளில் சில சொற்கள் விடப்பட்டிருந்தால்... எனக் குறிக்க வேண்டும். நீண்ட பகுதி விடப்பட்டிருந்தால்...எனப் புள்ளியிட்டுக் காட்ட வேண்டும்.

2. [Sic]என்ற குறியீடு மேற்கோளில் எழுத்துப் பிழை, கருத்துப் பிழை, சந்திப் பிழை இருந்தால் பயன் படுத்தப்படுகிறது. மேற்கோள் பகுதியில் இத் தகைய பிழைகளை நாம் திருத்தக் கூடாது. பிழையை அடுத்து [Sic] அல்லது [மூ.பி.] எனக் குறியிட்டு, அடுத்து திருத்தத்தை எழுத வேண்டும். இவ்வாறு குறியிட்டுக் காட்டுவதன் நோக்கம், மேற்கோளில் வரும் பிழை ஆய்வாளர் செய்த பிழையன்று என்பதை உணர்த்துவதற்காகும். மூலத்தில் வரும் பிழையே என்பதை, இக்குறியீட்டின் மூலமாக ஆய்வேட்டைப் படிப்போர் எளிதில் அறிந்து கொள்வர்.

(எ–டு)

"மாங்குடி மருதனார் என்பவர் தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை நிலையாமை அறிவுறுத்த வேண்டி மதுரைக்

கஞ்சி [மூ. பி.–காஞ்சி] புலவனெனவும் கூறப்பெறு வாராயினர். மாங்குடி கிழாரென்பவருமிவரே.''[1]

இதில் [மூ. பி.] என்ற குறுக்கக் குறியீட்டின் முன்னுள்ள கஞ்சி என்பது காஞ்சி என இருக்கவேண்டும். கஞ்சி என்பது மூல எழுத்துப் பிழையாகும். ஆய்வாளர் செய்த பிழையன்று என்பதை எளிதில் அறிந்து கொள்ளலாம். இவ்வாறு காட்டாமல் விட்டால் ஆய்வாளர் மேற்கோளை கவனக் குறைவால் பிழையுடன் எழுதிவிட்டார் என எண்ண வாய்ப்பளிக்கும்.

## சுட்டுப் பெயர்கள்

மேற்கோளில் முதன் முதலாக அவன், அவர், அது அவை, அவர்கள், அவள் என்ற சுட்டுப் பெயர்கள் வந்தால் அச்சுட்டுப் பெயரை அடுத்த பகர அடைப்புக் குறியினுள் பெயரைச் சுட்டிக் காட்ட வேண்டும்.

> "அவர்கள் [பரதவர்கள்] ஒரு காலத்தில் பேராற்றல் பெற்றவர்களாகத் திகழ்ந்தனர். கடற் செலவில தமக்கிருந்த சிறந்த திறமையும், முதிர்ந்த அனுபவமும் அவர்களை ஒப்பாரும் மிக்காரும் இலலாத செல்வர்களாகவும் உயர் தலைமையாளர் களாகவும் விளங்கச் செய்தன.''[2]

மேற்கண்ட மேற்கோளில் அவர்கள் என்ற சுட்டுப் பெயர் யாரைக் குறிக்கிறது? என்பதை அறியும் வண்ணம்பகர அடைப்புக் குறியினுள் [பரதவர்கள்] எனச்சுட்ட வேண்டும். அதே மேற்கோளில் மீண்டும் 'அவர்களை'என வரும் இடத்தில சுட்டத் தேவையில்லை. இவ்வாறே மேற்கோளில் பெயர் குறிக்கப்படாமல் அவன், அவர், அவள், அது, அவர்கள் போன்றசுட்டுப் பெயர்கள் வரும்போது, சுட்டுப் பெயரை அடுத்து பகர அடைப்பினுள் பெயரைக் குறிப்பிடவேண்டும்.

## மேற்கோளில் விளக்கம்

மேற்கோளில் ஆய்வாளர் ஏதாவது விளக்கம் தர வேண்டிய இன்றியமையாத நிலை ஏற்படும் பொழுது பகர அடைப்புக் குறியினுள் விளக்கத்தைத் தரலாம்.

> [எ-டு] *"Cobalt, an hexagonal crystal, exemplifies anisotropy energy. The direction of the hexagonal axis is the direction of easy magnetization [at room temperature], while all directions in the base plane normal to the axis, are hard directions."*

## மேற்கோளுக்குள் மேற்கோள்

மேற்கோளாக ஆளும் மூலப்பகுதியில் இரட்டை மேற்கோள் குறியீட்டில் அடங்கிய மேற்கோள் இருக்கலாம்; அத்தகைய மேற்கோளை ஆய்வேட்டில் பயன்படுத்தும்போது வழக்கம்போல நாம் பயன்படுத்திய மேற்கோளை இரட்டை மேற்கோளினுள் அமைக்க வேண்டும். உள்ளே வரும் மேற்கோளை (ஏற்கெனவே உள்ள இரட்டை மேற்கோள் குறியீட்டை, ஒற்றை மேற்கோள் குறியீடாக மாற்ற வேண்டும்) ஒற்றை மேற்கோள் குறியீட்டினுள் அமைக்க வேண்டும்.

> [எ-டு] "நீதிமன்றம் சங்க காலத்தில் இருந்தது. அது அறம்கூறு அவையம் என அழைக்கப் பட்டது. நீதிபதிகள் நேர்மை மிக்கவர்களாக விளங்கினர். மக்களுக்கு நீதி வழங்கிய இத்தகைய சிறந்த அவையில் நீதிபதிகளாக விளங்கியோர் யாவரென அறிய இயலவில்லை. சு. வித்தியானந்தன் 'நீதியிலும் அனுபவத்திலும் நாட்டு வழக்கங்களைப் பற்றிய அறிவிலும் சிறந்த கிராம முதலியோரே நடுவராக இருந்திருக்கலாம்' என்பர்

சோழரது உறையூரிலும் அறம்கூறு அவையம் இருந்தது''[1]

இப்பகுதியில் ''நீதிமன்றம் முதல் அறம்கூறு அவையம் இருந்தது'' முடிய உள்ள பகுதியை மேற்கோளாக எடுத்தாள வேண்டுவதாக வைத்துக் கொள்வோம். இப்பகுதியை வழக்கம்போல மேற்காட்டியவாறு இரட்டை மேற்கோள் குறியீட்டில் அமைத்துக் காட்ட வேண்டும் இதில் "நீதியிலும்......இருந்திருக்கலாம்', என்பது வரை உள்ள பகுதி இரட்டை மேற்கோள் பகுதியாக இருந்தது. இப்பகுதி மேற்கோளுக்குள் மேற்கோளாக வருவதால் அப்பகுதியை மேற்காட்டிய வாறு ஒற்றை மேற்கோளிட்டு அமைக்க வேண்டும்.

## செய்யுள் மேற்கோள்

செய்யுளை மேற்கோளில் ஆளும்போது மூலத்தில் உள்ளபடியே எழுத வேண்டும். இரண்டு அடிகளை மட்டும் மேற்கோளாக ஆண்டால் உடற்பகுதியிலேயே இரட்டை மேற்கோள் குறியீட்டினுள் எழுத வேண்டும். இரு அடிகளையும் பிரித்துக் காட்ட முதலடியின் முடிவில்/என்றவாறு கோடிட வேண்டும். இரண்டு அடிகளுக்கு மேற்பட்டிருந்தால்; ஆய்வுப் பகுதி யிலிருந்து தனித்து ஓரப்பகுதியிலிருந்து சற்றுத் தள்ளி நூலிலுள்ளவாறு எழுத வேண்டும். ஆய்வுப் பகுதியிலிருந்து தனித்து எழுதப்படுவதால் மேற்கோள் குறியீடு தேவையில்லை.

[எ-டு] இரண்டு அடிகளாயின் ''சில்பத உணவின் கொள்ளை சாற்றிப்/ பல்லெருந்து உமணர் பதிபொகு நெடுநெறி''[2] என எழுத வேண்டும்.

இரண்டு அடிகளுக்கு மேற்பட்டிருப்பின்,

**கடம்பமர் நெடுவேள் அன்ன மீளி**
**உடம்பிடித் தடக்கை ஓடா வம்பலர்**
**தடவுநிலைப் பலவின் முழுமுதல் கொண்ட**
**சிறுசுளைப் பெரும்பழம் கடுப்ப மிரியல்**
**புணர்ப்பொறை தாங்கிய வழிவாழ் நோன்புறத்து**
**அணர்செவிக் கழுதை சாத்தொடு வழங்கும்!**

என எழுத வேண்டும்

## உரைநடை மேற்கோள்

மூன்று வரிகளாக உரைநடை மேற்கோள் அமையு மாயின், அதனை ஆய்வின் உடற்பகுதியிலேயே இரட்டை மேற்கோள் குறியீட்டினுள் எழுதவேண்டும். மேற்பட்டிருப்பின் ஓரப்பகுதியிலிருந்து சற்றுத்தள்ளி பத்தி தொடங்குவதுபோல் தொடங்கி எழுத வேண்டும். இவ்வாறு எழுதுவதால் மேற்கோள் குறியீடு தேவை யில்லை.

[எ-டு] சமணர்கள் துறவு பூண்டு பொதுப்பணி புரிந்தனர். அவர்களைப் போலவே தமிழ்நாட்டு அந்த ணர்களும் துறவு பூண்டு பொதுப்பணி செய்தனர் என்பது மதுரைக் காஞ்சியால் அறியலாகும் புதுச் செய்தியாகும். இது பற்றி, சாமிசிதம்பரனுர்.

> அக்காலத்திலேயே மதுரையிலே பவுத்த சமணப் பள்ளிகளைப் போல அந்தணர் பள்ளி இருந்ததாக இவ்வாசிரியா கூறுகிறுர். இது ஒரு புதிய செய்தி. சமணத் துறவிகளைப் போலத் தமிழ்நாட்டு அந்தணர்களிலும் துறவிகள் இருந் தார்கள். அவர்கள் வேத வேதாந்தங்களைப் போதித்து வந்தார்கள் என்ற உண்மையை இதன் மூலம் காணலாம்.[2]

எனக் கூறுகிறுர்.

## கடிதத்தை மேற்கோளில் ஆளும் முறை

கடிதத்தை மேற்கோளில் ஆளும்போது இடம், தேதி எழுதுவோரின் முகவரித் தொடக்கம், விளிச் சொல், கடிதத்தின் உடற்பகுதி, இப்படிக்கு, தங்கள் உண்மையுள்ள கையெழுத்து இவைகளின் தொடக்கத் தின் முன்னர் இரட்டை மேற்கோள் குறியிட்டு, கையெழுத்து முடிவில் இரட்டை மேற்கோள் குறியீட் டினால் மூட வேண்டும்.

[எ—று]

"கோயம்புத்தூர்,
"6-5-1978.

"வீ. பழனிசாமி,
49, புலிய குளம் ரோடு,
கோயம்புத்தூர்.

"அன்புடை நண்ப,

உன் கடிதம் கண்டேன்: களிப்புற்றேன். உனக் குச் சில அறிவுரைகளைக் கூறுகின்றேன். இன்பத்தைக் கண்டு அளவிலா மகிழ்ச்சி அடைய வேண்டாம். துன் பத்தைக் கண்டுத் துவண்டு விட வேண்டாம். இன்ப மும் துன்பமும் இணைந்ததே வாழ்க்கை. உன்னுடைய முன்னேற்றத்தைக் கண்டு சிலர் பொறுமைப்படலாம்; பூசலிட வரலாம்; எத்தனையோ எதிர்ப்புக்கணைகள் உன்னை நோக்கிப் பாயலாம். அவற்றையெல்லாம் எதிர்த்து நிற்குல் நூற்றல் வேண்டும். நூற்றலோடு உழைபபும் வேண்டும். உழைப்பினால் உயர்வை அடை வாய், அத்துடன் நேர்மையும் உண்மையும் உடைய வனுக விளங்கினால் நமக்கும் நன்று; நாட்டுக்கும் நன்று. சத்தியம் செயிக்கும்; செய்க நல்வினையே. வணக்கம்.

"இப்படிக்கு
"உன் அன்புடை நண்பன்,
"வீ. பழனிசாமி."

## மேற்கோள்களை ஆளும்போது ஆய்வாளர் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகள்.

1. மேற்கோளை ஆய்வுப்பகுதியில் ஆளும்போது பல நோக்கிலும் சிந்தித்துப் பார்த்து, தேவையிருந்தால் மட்டுமே பயன்படுத்த வேண்டும்.
2. மேற்கோளை மிகச் சுருக்கமாக, கருத்தைத் தெளிவாக்கும், வலிவூட்டும் பாங்கில் மட்டுமே எடுத்தாள வேண்டும். தேவையில்லாத பகுதியையெல்லாம் சேர்த்து ஆய்வேட்டின் சிறப்பைக் கெடுக்கக் கூடாது.
3. மேற்கோளை அப்படியே நூலிலுள்ளவாறு எடுத்தாள வேண்டும்.
4. அனைவருக்கும் தெரியக்கூடிய, புகழ்பெற்ற மேற்கோளுக்கு அடிக்குறிப்புத் தேவையில்லை. மற்றபடி எல்லா மேற்கோள்களுக்கும் அடிக்குறிப்பிடுதல் நன்று.
5. மேற்கோளில் பிழையிருந்தால் [sic] அல்லது [மூ. பி.] என்று குறியிட்டு அடுத்து, பிழைத்திருத்தத்தை எழுதவேண்டும். மேற்கோளில் ஓரிரு சொற்கள் விடப்பட்டால்... என மூன்று புள்ளிகளையும், பலவரிகள் விடப்பட்டால்......எனப் பல புள்ளிகளையும் இட்டுக் காட்ட வேண்டும். மேற்கோளில் மாற்றம், விளக்கம் செய்ய வேண்டின் அவற்றினை [ ] எனப் பகர அடைப்புக் குறியிட்டினுள் எழுதிக் காட்ட வேண்டும்.

# 10. பின்னிணைப்புகள்

(Appendixes)

ஆய்வேட்டின் இறுதியில் உடற்பகுதியை அடுத்து அமையும் பகுதியாகும். ஆய்வுத் தலைப்புகளைப் பொறுத்து, பினனிணைப்புகள் ஆய்வேட்டின் இறுதியில் இடம் பெறுகிறது. ஒரு சில பாடத்துறைகள் சம்பந்தப்பட்ட ஆய்வேடுகளில் ஆய்வேட்டின் முன்பகுதியும் உடற்பகுதியும் மட்டுமே அமைகின்றன; பின்னிணைப்புகள் இடம் பெறுவதில்லை. பின்னிணைப்புகள் என்ற பகுதியில் இடம் பெறும் செய்திகள் ஆய்வுப் பகுதியோடு நெருங்கிய தொடர்புடையன. அதே சமயத்தில் உடற்பகுதியில் இடம்பெறுமல் தனியாக, மேற்கொண்ட ஆய்வுக்கு வலிஹூட்டும் வகையில் பின்னிணைப்புகளாகத் தரப்படுகினறன.

## அமையும் இடம்

பின்னிணைப்புகள் ஆய்வேட்டின் உடற்பகுதிக்கும் துணைநூற் பட்டியலுக்கும் இடையில் அமைக்கப்படுகின்றன.

## பின்னிணைப்புகளில் அமைவன

ஆய்வுப்பகுதியிலோ அல்லது அடிக்குறிப்பிலோ விளக்கம அளிக்கப்படாத, போதுமான விளக்கம் பெருத செய்திகளை விளக்குவதற்கு வாய்ப்பு நல்குவது பினனிணைப்பாகும். எளிதில் பலருக்கும் கிடைக்காத ஆய்வுத் தொடர்பான மூல உண்மைக் கூறுகளை (Sources) பலருக்கும் பயன்படும் வண்ணம் பின்னிணைப்பில் தரலாம். ஆய்வுக்கு அடிப்படையான மூல உண்மைக் கூறுகள் அச்சேருத பழஞ்சுவடி

களிலிருந்தும் எடுக்கப்பட்டிருக்கலாம். அவற்றைப் பின்னிணைப்பில் கொடுத்தல் சிறப்பானது; பலருக்கும் பயன்படுவதோடு மேற்கொண்டு ஆய்வுப்பணியைத் தொடங்குவோருக்கும் பெரும்பயன் அளிக்கும். நாட்டுப் புறப்பாடல்களைப்பற்றி ஆராய்வோர், தம் ஆய்வுப் பணிக்கு அடிப்படை அல்லது முதன்மை மூலம் உண்மைக் கூறுகளாகச் சேகரித்த பாடல்களை அப்படியே பின்னிணைப்பில் தரலாம். கள ஆய்வின் மூலம் பெற்ற அனுபவங்களைப் பின்னிணைப்பில் தரலாம். ஆய்வுத் தொடர்பாகக் களஆய்வின் போது எடுத்த புகைப்படங்களைப் பின்னிணைப்பில் சேர்க்கலாம். கள ஆய்வின் போது ஆய்வுத் தொடர்பாக நிகழ்த்திய பேட்டிகள் (Interviews), வினாத்தாள்வரிசை முறை (Questionnaire), உரையாடல்கள் போன்றவற்றையும், வானொலி, தொலைக்காட்சி உரைகள் போன்றவற்றையும் தரலாம். நீண்ட அட்டவணைகள், விளக்கப்படங்கள் வரைகட்டப படங்கள் (graphs) போன்றன ஆய்வோடு தொடர்பு கொண்டிருப்பின் அவற்றையும் பின்னிணைப்பில் சேர்க்க வேண்டும். ஆய்வுப் பகுதியில் ஏதாவது குறிப்பிட்ட புதிய உத்தி முறைகள் கையாளப்படடிருந் தால் பின்னிணைப்பில் விளக்க வேண்டும், சமுதாய வியல், புள்ளியியல், புவியியல் போன்ற பாடத்துறை ஆய்வுகளில் கணித அடிப்படையிலான புள்ளி விவரப் பட்டியல்களைப் பின்னிணைப்பில் சேர்த்தல் இன்றியமை யாதது. ஆசிரியர் பெயர் அகநிரல். கலைச்சொல் அகர நிரல் ஆகியவற்றையும் சேர்க்கலாம். ஆவணச் சான்று களையும் தரலாம்.

## பிரிவுகள்

பின்னிணைப்பில் இடம்பெறும் செய்திகள் பலவாக இருப்பின், அவற்றைக் கொடுக்கப்படும் செய்திகளுக் கேற்ப பின்னிணைப்பு 1, பின்னிணைப்பு 2, என்றவாறு பிரித்து ஒவ்வொரு பின்னிணைப்புக்கும் தக்க பெயரிட வேண்டும். ஒவ்வொரு பின்னிணைப்பையும் புதிய

பக்கத்தில் தொடங்க வேண்டும். பின்னிணைப்புகள் இடம்பெறும் பக்கத்தை முறையாக ஆய்வேட்டின் பொருளடக்கத்தில் குறிக்க வேண்டும்.

## பயன்கள்

1. ஆய்வாளர் மேற்கொண்ட தன்முயற்சியின் சிறப்பினைக் காட்டுவது பின்னிணைப்பாகும்.
2. ஆய்வாளரின் பரந்தபட்ட அறிவின் திறனையும் காட்டுவதாகும்.
3. பின்வரும் ஆய்வாளருக்கு வேண்டிய ஆய்வு பற்றிய அருஞ் செயதிகள் பின்னிணைப்புகளில் இடம்பெறுவதால், அவை அவர்களுக்குப் பெரிதும் பயன்படக் கூடும்.
4. ஆய்வுத்தொடர்பான பேட்டிகள், வினாவரிசைகள், உரையாடல்கள், அட்டவணைகள், விளக்கப்படங்கள், போன்றவற்றை முழுமையாகப் பின்னிணைப்பின் மூலமாக அறிந்து கொள்ள முடிகிறது.
5. ஆய்வுப்பகுதியிலோ அல்லது அடிக்குறிப்பிலோ போதுமான விளக்கம் பெறாத செய்தி அல்லது கருத்துப்பற்றிய விளக்கத்தைப் பின்னிணைப்பில் தருவதால் அவை பலருக்கும் பயனுடையதாக அமைகிறது.

## ஆய்வாளர் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகள்

1. ஒவ்வொரு பின்னிணைப்புக்கும் ஆய்வோடு நெருங்கிய தொடர்புடையதாக இருப்பதோடு போதுமான விளக்கத்தைப்பெற்றிருக்கிறதா? என்பதைப் பார்க்க வேண்டும்.

2. ஆய்வுப்பகுதிக்கு வலிவும், தரமும் அளிக்கும் தொடர்புடைய பகுதிகளை மட்டுமே பின்னிணைப்பில் சேர்க்க வேண்டும். ஆய்வேட்டுக்குத் தொடர்பில்லாத செய்தி எத்தன்மைத்தாயினும் அதைச் சேர்க்கக்கூடாது.

3. பின்னிணைப்புத் தலைப்புகள் சரியான இடத்தில் நிறுத்தக் குறியீடு இன்றி அமைக்கப்பட வேண்டும். தலைப்புப் பெயரைப் பின்னிணைப்புச் செய்திக்குப் அரண் சேர்க்கும் வகையில் எழுத வேண்டும். இணைக்கப்பட்ட பின்னிணைப்புகளுக்கு முறைப்படி எண்ணிட வேண்டும்.

# 11. அட்டவணைகளும் விளக்கப் படங்களும்

## (Tables and Charts)

அட்டவணைகள் ஆய்வுறைக்குச் சிறப்புச் சேர்க்கும் வகையில் மட்டுமே அமைக்கப்படவேண்டும். முடிந்த அளவுக்கு ஆய்வுரைப் பகுதியிலேயே தேவையான இடங்களில் அட்டவணைகள் எளிதில் பார்க்கும் வண்ணம் இணைக்க வேண்டும். அட்டவணை சிறியதாக இருந்தால் மட்டுமே இவ்வாறு சேர்க்கப்பட வேண்டும்! நீண்ட அட்டவணையாயின் அதனைப் பின்னிணைப்பில் சேர்க்க வேண்டும். எளிதில் அடையாளம் காணும் வகையில் ஆய்வேடு முழுவதிலும் இடம்பெறும் அட்டவணைகளுக்கு முறையாக எண்ணிட வேண்டும். அட்டவணைகளுக்கு அரபு எண்களை முறையாகக் கொடுக்கலாம்.

(எ-டு)

**அட்டவணை-6**

ஈரலகு
இடைவெளி } தட்டெழுத்தில் அட்டவணைத் தலைப்பு.

அட்டவணை எண் அமையும் இடத்திற்கும் அட்டவணைத் தலைப்புக்கும் இடையே ஈரலகு இடைவெளி இருக்க வேண்டும். அட்டவணை எண்ணும், அட்டவணைத் தலைப்பும் அட்டவணையின் மேற்பகுதியில் மையப்படுத்தித் தட்டெழுத்துச் செய்யப்பட வேண்டும். அட்டவணைத் தலைப்புக்குக் கீழே ஈரலகு இடைவெளி விட்டு அட்டவணை

அமைதல் வேண்டும். அட்டவணை தனித்தாளில் இடம் பெறாமல் ஆய்வுப்பகுதியிலே இடம்பெறுமாயின் அட்டவணையின் மேலும் கீழும் மூன்றலகு இடம் விட்டிருக்க வேண்டும். பின்னிணைப்பில் அட்டவணைகள் இடம் பெறுமாயின் ஆய்வுரைப் பகுதியில் இறுதியாக அமையும் அட்டவணை எண்ணிலிருந்து பின்னிணைப்பில் இடம்பெறும் அட்டவணைகளுக்கு முறையாகத் தொடர்ந்து எண்ணிடப்பட வேண்டும்.

அட்டவணை ஒவ்வொன்றும் எளிமையாகவும் தெளிவாகவும் தன் விளக்கம் அமைந்ததாயும் (Self-explanatory) இருக்க வேண்டும். அதாவது அட்டவணை பற்றிய விவரச் செய்திகளைப் படிக்காமலேயே, அட்டவணையே சிறப்பான விளக்கத்தைத் தரும் பாங்கில் அமைதல் வேண்டும். ஆய்வுரைக்கு வலிவும், சிறப்பும் தரும் அட்டவணைகளையே ஆய்வேட்டில் இணைக்க வேண்டும். அட்டவணையில் இடம் பெறும் விவரத்திற்கு ஏற்ப அட்டவணை நெடுங்கோடுகளால் பிரிக்கப்படவேண்டும். ஒவ்வொரு அட்டவணையிலும் ஒரு விவரம் மட்டுமே இடம்பெற வேண்டும். நிமிர்நிலைக் கட்டங்கள் ஒவ்வொன்றிற்கும் எண்ணிட வேண்டும். ஒவ்வொன்றிற்கும் அதில் இடம் பெறும் செய்திக்கு ஏற்ப சிறு உட்தலைப்பிட வேண்டும்.

## விளக்கப் படங்கள் (Charts)

ஆய்வோடு தொடர்புடைய விளக்கப்படங்களை மட்டுமே இணைக்க வேண்டும். இந்தியன் மையினால் விளக்கப்படங்களை வரைய வேண்டும். புள்ளியியல், புவியியல், சமுதாயவியல் போன்ற ஆய்வுகளில் விளக்கப்படங்கள் பெரிதும் இடம்பெறுகின்றன. விளக்கப் படங்களுக்கு முறையாக உரோமன் எண்களை இடவேண்டும். விளக்கப்பட எண், அதன் தலைப்பு இவைகள் விளக்கப்படத்திற்கு மேலாக மையப்

படுத்தித் தட்டெழுத்தில் அமைய வேண்டும். அட்டவணை அமைக்கும் முறையில் கூறிய அளவில் விளக்கப்பட எண், அதன் தலைப்பு, விளக்கப்படம், இவற்றிற்கிடையே இடைவெளி விட வேண்டும்.

(எ–டு)

**விளக்கப்படம் IV**

ஈரலகு இடைவெளி } தட்டெழுத்தில் விளக்கப்படத்தலைப்பு.

விளக்கப்படத் தலைப்புச் சுருக்கமாக அமைய வேண்டும்.

## அட்டவணைகளுக்கும் விளக்கப்படங்களுக்கும் ஆடிக்குறிப்புகள் (Foot Notes to Tables and Figures)

அட்டவணைகள் அல்லது விளக்கப்படங்களில் குறிப்பிட்ட ஒரு செய்தியைப் பற்றி ஏதாவது விளக்கம் அளிக்க வேண்டியிருப்பின், அவ்விளக்கத்தை அடிக் குறிபபில் காட்ட வேண்டும். அடிக்குறிப்பு எண்களுக் குப் பதிலாக† போன்ற தனிப்பட்ட சிறப்புக் குறியீடு களைக் கையாள வேண்டும். முதல் அடிக்குறிப்பு விளக்கம், அட்டவணை அல்லது விளக்கப்படத்தின் கீழே ஈரலகு இடம் விட்டு அமைக்கப்படுதல் வேண்டும்.

நீளமான அட்டவணை அல்லது விளக்கப்படம் இருப்பின் நீளமான பெரிய தாளில் அமைக்கப்பட்டு ஆய்வுரையில் தேவையான இடத்தில் மடித்து வைக்கப் படுவது வழக்கம். அவ்வாறு பெரிய நீண்ட அட்டவணை அல்லது விளக்கப் படம் ஒரு பக்க அளவில் இருக்க வேண்டி அதனைப் புகைப்படக் கருவி மூலம் குறைத்துக் கொள்ள முடியும். இவ்வாறும அமைக்கப்படுதல் உண்டு.

# 12. ஆய்வேட்டின் நடை

## (Style of The Thesis)

எழுத்துகள் கருத்துகளோடு இணைந்து, ஏட்டில் எழுந்து நடை போடுவதையே நடை (Style) எனலாம். "நடை என்பது ஓர் ஆசிரியரின் தனித்தன்மையை வெளிப்படுத்த வல்லது அவரை இனங்கண்டு கொள்ளும் வகையில் அவருக்கே உரித்தாக இருக்கும் வெளிப்பாட்டு மொழிப் பாங்கே நடை எனப்படும்' என்பர் முர்ரே. "நடை என்பது ஒவ்வொருவரின் இலக்கியப் பயிற்சிக்கும், சிந்தனைத் திறத்திற்கும், கற்பனை வளத்திற்கும் ஏற்ப அமைவதாகும்," என்பர் சுந்தரமூர்த்தி நயினர் (எழுத்து சனவரி, *1960*). இலக்கிய நடை, தனித் தமிழ் நடை, கடுமொழி நடை, எளிய நடை, வசன நடை, மணிப்பிரவாள நடை எனத் தமிழ் மொழி நடை பலவாறாக அமையக் காணலாம்.

அனைவரின் நடையும் ஒன்று போலவே இருப்பதில்லை. ஒவ்வொருவர்க்கும் எனத் தனி நடை உண்டு. ஒவ்வொருவரின் நடையிலும் வேறுபாடு காணப்படுகிறது. இது குறித்து ஃபயர் (Fyre) என்பவர் "இலக்கிய ஆசிரியரின் எழுதும் இலக்கிய நடை வேறுபட்டு அமைவதற்குக் காரணம் ஒவ்வொருவரும் அவரவர் மனப் பண்பாட்டுக்கு ஏற்ப ஒலி நயத்தையும், பொருளுணர்ச்சியையும் தேர்ந்து எழுதுவதே ஆகும். ஒவ்வொருவர்க்கும் கையெழுத்து வேறுபாடு அமைவதற்குக் காரணம், ஒவ்வொருவருக்கும் அவரவர் இளமை முதல் தத்தம் கைக்குத் தந்த பழக்கமும், கையை ஆளும் உளத்தின் செம்மை, வேகம், வன்மை, மென்மை முதலிய பண்புகள்

ஆகும். அது போலவே நடை வேறுபாட்டிற்குக் காரணமும், அந்தந்த ஆசிரியர்களின் உள்ளத்திற்குத் தந்த பழக்கமும, பண்புகளும் ஆகும்"[1] எனக் கூறு கிருர்.

### ஆய்வேட்டின் நடை

சீரிய முயற்சி, ஆழ்ந்த சிந்தனே, ஆழமான கல்வி, கருத்துத் தெளிவு ஆகியவற்றிற்குப் பின் ஆய்வாளர் ஒருவர் தான் உணர்ந்த உண்மைகளே அல்லது கண்டு பிடிப்புகளே உறுதிப்படுத்தும் நோக்கில் ஆய்வேட்டிற் கென எழுதும் நடையை ஆய்வு நடை எனலாம். ஆய்வாளர் தான் உணர்ந்த உண்மையை இயல்பான நடையில் எடுத்துரைக்க வேண்டும். ஆய்வு மொழி நடை எளிமையாகவும், தெளிவாகவும், செறிவாகவும் இருக்க வேண்டும். இம்மூன்று பண்புகளும் ஆய்வேட்டின் தரத்தை உயர்த்துவனவாகும்.

### ஆய்வு நடையும் பிழை நீக்கமும்

முதன் முதலாக ஆய்வுரையை எழுதும்போது கருத்துகளுக்கே முக்கியத்துவம் தந்து எழுத வேண்டும். பின்னரே எழுதிய ஆய்வுரையை நன்குப் படித்துப் பார்த்து, பிழைகளே நீக்க வேண்டும். எழுத்துப்பிழை, சந்திப் பிழை, தொடர்ப்பிழை, கருத்துப்பிழை ஆகிய நான்கு பிழைகளும் ஆய்வுரை யில் இடம்பெறுதலேத் தவிர்த்தல் ஆய்வாளரது கடமையாகும்.

### தொடர்ப்பிழை நீக்கம்

தொடர்ப்பிழைகளே நீக்கிளுல்தான் ஆய்வுநடை செம்மையாகவும், தெளிவாகவும் துலங்கும்.

---

[1]Fyre, Anatomy of Criticism, P. 268.

1. வழூஉச் சொற்கள், கிளை மொழிகளான வட்டார மொழி போன்றவற்றை ஆய்வு நடையில் பயன் படுத்தக் கூடாது.
2. "இருக்கலாம்" போன்ற ஐயக்கிளவிகளையும், தப் பித்துக்கொள்ள வாய்ப்பளிக்கும் "என்பர்" போன்ற சொற்களையும், ஆய்வுரையில் இடம் பெறுதலைத் தவிர்க்க வேண்டும்.
3. "அப்படியானால்" போன்ற ஆசிடைக் கிளவிகள் ஆய்வு நடையில் வரக் கூடாது.
4. ஒரே மாதிரியான இயல்புடைய தெளிவான சொற் களையே ஆய்வு நடையில் பயன்படுத்த வேண்டும். உதாரணமாக "போலும்" போன்ற சொற்களை தொடர்ந்து பயன்படுத்தி வந்து இறுதியில் "போன்ம்" போன்ற சொற்களைப் பயன்படுத்தக் கூடாது.
5. அடிக்கடி எனவே, ஆகவே போன்ற சொற்களைப் பயன்படுத்தக் கூடாது.

மேற்கூறிய தொடர்ப் பிழைகளேயன்றி, ஆய் வுரையில் வரும் மற்ற தொடர்ப் பிழைகளையும் நீக்கி எழுதவேண்டும்.

## கருத்துப்பிழை நீக்கம்

கூறப்போகும் கருத்துகளை ஒரு முறைக்குப் பல முறை நன்கு சிந்தித்துப் பார்த்து, ஆராய்ந்து, கருத்து கள் தெளிவு பெற்ற பின்னரே எழுதத் தொடங்க வேண்டும். கருத்துகளைச் சுற்றி வளைக்காமல் நேரடி யாக எழுதிச் செல்ல வேண்டும். முரண்பட்ட கருத்து களைக் கூறும்போது, நன்கு அக்கருத்துகளை ஆராய்ந்து பார்த்து, தெளிவாக, படிப்போர் மனத்தில் குழப்பத்தை உண்டாக்காமல் இருக்கும் வண்ணம் எழுத வேண்டும்

முன்னுக்குப் பின் முரணில்லாமல் கருத்துகளை எடுத்தியம்பூதல் ஆய்வுநடையின் சிறப்புக்கும், செம்மைக்கும், தெளிவுக்கும், எளிமைக்கும் வழி கோலுவதாகும். நடை, சிறப்பாக இருக்க வேண்டுமென்று நினைத்து வலிந்து எதுகை மோனைகளைப் பயன்படுத்தி எழுதக் கூடாது. வலிந்து அலங்கார நடையைப் பயன்படுத்திப் படிப்போரை மயக்கும் வண்ணம் எழுதிச் செல்வது கருத்துகளுக்கு முக்கியத்துவம் தராமல் போக வழி ஏற்படுத்துவதாகும். ஆய்வாளரின் சிந்தனை ஓட்டமும், கருத்தோட்டமும் தடைபடாமல் இருக்க, ஆய்வாளர் தம்முடைய இயல்பான நடையிலேயே எழுதிச் செல்ல வேண்டும்.

### சந்திப்பிழை நீக்கம்

இயல்பாக ஆய்வுரையினைப் படிக்கும் பொழுது, சந்திப்பிழைகளை எளிதில் திருத்திக் கொள்ளலாம்.

இலக்கணிகள் கூறும் கருத்துகளை நினைவில் கொண்டு பிழைகளைத் தவிர்க்க வேண்டும்.

1. அந்த, இந்த, எந்த, அங்கு, இங்கு, எங்கு, அப்படி, இப்படி, எப்படி ஆகியவற்றின் பின் வருமொழி முதல்வரின் ஒற்று மிகவேண்டும்.
2. செயவென் எச்சத்தின் பின் வலி வரின் ஒற்று மிகுதல் வேண்டும். செய்தென் எச்சத்தில் உகர ஈற்று எச்சம் வன்றொடர்க் குற்றியலுகரமாக இருக்கும் பொழுதும், இகர ஈற்று செய்தென் எச்சமாக இருக்கும்பொழுதும் வலி வரின் ஒற்று மிகும்.
3. தொகைகளில் இரண்டாம், நான்காம் வேற்றுமை விளிகளில் ஒற்று மிகும். ஏனை இடத்து ஒற்று மிகாது.

4. உயர்திணைப்பெயர் முன் வலிவரின் ஒற்று மிகக் கூடாது.

5. தொகைகளில் வினைத்தொகை, உம்மைத் தொகை ஆகிய இரு தொகைகளைத் தவிர, ஏனைத் தொகை களில் ஒற்று மிகவேண்டும். "இராப் பகல்" என்ற உம்மைத் தொகை இதற்கு விதிவிலக்கு ஆகும். வேற்றுமைத் தொகைகளில் இரண்டாம், நான்காம் வேற்றுமைவிரிகளில் ஒற்று மிகும். ஏனை இடத்து ஒற்று மிகாது.

6. வந்தபோது, சென்றபோது போன்ற கூட்டு வினை யெச்சங்களில் பெயர் வினைக்கு இலக்கணிகள் கூறும் நெறி முறைகளைப் பின்பற்றிப் பிழைகளை நீக்க வேண்டும்.

மேற்கூறியவைகளையும், மேலும் இலக்கணிகள் கூறுவனவற்றையும் பின்பற்றி, ஆய்வாளர் பிழைகளை நீக்கி எழுத விழைய வேண்டும். அப்போதுதான் ஆய்வுரை சிறப்புறும்.

## தற்புகழ்ச்சி நடை

தற்புகழ்ச்சி நடையைத் தவிர்க்க வேண்டும். தற்புகழ் பாடும் சொற்களை ஆய்வு நடையிலிருந்து அறவே நீக்க வேண்டும். தன்மை இடப்பெயரையும் மூன்றும் இடத்தில் அமைத்து எழுதுதல் வேண்டும். உதாரணமாக நான், என், என்னை, என்னுடைய, நம், நம்முடைய, நம்மை என்பன போன்ற தன்மை இடப் பெயர்ச் சொற்கள் ஆய்வுநடையில் இடம் பெறுமல் பார்த்துக் கொள்ளவேண்டும். "இது என் கருத்து", "நான் இவ்வாறு கருதுகின்றேன்", "என்னுடைய முடி வான கருத்து இது" என்பன போன்ற தற்புகழ் பாடும் சொற்களை ஆய்வு நடையில் எழுதக் கூடாது.

இவற்றை முறையே "இது ஆய்வாளர் கருத்து", "ஆய்வாளர் இவ்வாறு கருதுகிறார்", "ஆய்வாளருடைய முடிவான கருத்து இது" என எழுதிச் செல்ல வேண்டும்.

## கால மயக்கம்

சொற்றொடர்களைக் கால மயக்கத்தோடு எழுதக் கூடாது. ஆய்வுரையை முதலிலிருந்து முடிவுவரையில் ஒரே காலத்தைக் காட்டும் வகையில் எழுதவேண்டும்.

## பத்தி அமைத்தல்

கருத்துகளில் மயக்கம் இருக்குமாறு பத்தி அமைக்கக்கூடாது. நீண்ட பத்தி அமைத்தலைத் தவிர்க்க வேண்டும். சீரான பத்தி அமைப்பே சிறப்புடையதாகும். ஒவ்வொரு பத்தியிலும் கூறப்படும் கருத்துத் தெளிவுபெற அமையவேண்டும். பத்திகளிடையே இயைபு இருக்குமாறு பத்தி பிரித்து எழுதவேண்டும்.

## நிறுத்தக் குறியீடுகள்

ஆய்வுநடை தெளிவுற அமையத் தேவையான இடங்களில தக்க நிறுத்தக் குறியீடுகளைக் கையாள வேண்டும். ஆய்வுரையை முதல் முறை எழுதிப் படிக்கும்போது நிறுத்தக்குறியீடுகள் சரிவரக் குறிக்கப்பட்டுள்ளனவா? என்று பார்க்க வேண்டும். கருத்துத் தெளிவுக்கு நிறுத்தக் குறியீடுகள் பெரிதும் பயன்படுகின்றன. காற்புள்ளி, அரைப்புள்ளி, முக்காற்புள்ளி, முழுப்புள்ளி இவற்றை இடமறிந்து பயன்படுத்த வேண்டும். கருத்துகளில் தொடர்பிருக்கும் பொழுது முக்காற் புள்ளியையும், இரு கருத்துகள் அல்லது அதற்கு மேற்பட்ட கருத்துகளை தொடர்ந்து எடுத்துரைக்கும்போது, ஒன்றையடுத்து அடுத்து அரைப் புள்ளியையும், தொடர் முடிவில் முற்றுப் புள்ளியையும் இடுதல் வேண்டும்.

ஆய்வேட்டின் மொழி நடைச்சிறப்பில் நிறுத்தக் குறியீடுகளின் பங்கு பெரிது; மிகப் பெரிது.

## ஆய்வுநடையில் தவிர்க்க வேண்டியன

1. கூறும் கருத்துகளை அரைகுறையாகக் கூறலும்,
2. ஒரு கருத்தையே மிகையாக விரித்து எழுதச் செல்வதும்,
3. திரும்பத் திரும்ப முன் கூறிய கருத்தையே கூறிச் செல்வதும்,
4. பொருள் மாறுபடும் வகையில் உள்ள சொற்களைக் கையாள்வதும்,
5, வழூஉச் சொற்களை எழுதுவதும்,
6. ஐயத்திற்கு இடம் தரும் வகையில் இருபொருள் படும் சொற்களைப் பயன்படுத்துவதும், காலம் மயங்குமாறு எழுதுவதும்,
7. ஆய்வோடு தொடர்பற்ற கருத்துகளை வலிந்து சேர்த்து எழுதுவதும்,
8. ஒரு கருத்தை விளக்க, மற்றொன்றை விளக்கிச் செல்வதும்,
9. தொடக்கத்தைச் சிறப்பாக எழுதி போகப் போக தொய்வான நிலையில் எழுதுவதும்,
10. உரையாடல், மேடைப்பேச்சு, கொச்சைச் சொற்கள் • போன்றவற்றை ஆய்வுநடையில் பயன்படுத்துவதும்,

ஆக மேற்கூறிய குறைகள் ஆய்வுரையில் வராமல் பார்த்துக்கொள்ள வேண்டும். அப்போதுதான் ஆய்வு நடை சிறபபுற்றுத் துலங்கும்.

**ஆய்வுநடையில்•பின்பற்ற வேண்டியன**

1. ஆய்வு நடை செறிவு பெற அமைய வேண்டும். கருத்துச் செறிவு ஆய்வேட்டில் பின்பற்றப்பட வேண்டிய ஒன்று. எக்கருத்தையும் சுருங்கச் சொல்லி விளங்க வைக்க வேண்டும்.

2. கடுமையான மொழிநடையையும், அலங்கார நடையையும் பின்பற்றுமல், தெளிவான மொழிநடையில் எழுதிச் செலல வேண்டுழ.

3. செறிவோடு கூறும் கருத்துகள் பொருள் ஆழம் மிக்கதாக அமைய வேண்டும்.

4. கூறப்போகும் கருத்துகளை முறையாகச் சிந்தித்து ஆராய்ந்து தெளிந்த பின்னர், முன்னுக்குப்பின் முரண்பாடில்லாமல் முறையாக எழுதிச் செலல வேண்டும். கருத்துகளின வைப்பு முறை, ஆய்வேட்டின் உட்தலைப்புகளின் அமைப்பு முறை, அடிக்குறிப்புகள், துணை நூற்பட்டியல, பின்னிணைப்புகள் இவற்றின் முறைகள போன்றன சிறப்பாகப் பேணப்பட வேண்டும்.

5. ஆய்வேட்டைப் படிப்போரின் மனம் மலைத்துவிடும் படியான கருத்துகள், செய்திகள் போன்றவறறைக் கூறுதலைத் தவிர்த்தல் நலம் பயக்கும். ஆய்வு நடை செம்மையாக அமைய இதுவும் ஒரு சிறந்த வழியாகும்.

6. ஆய்வு உண்மைகளுக்கு வலிவும் பொலிவும் தரத் தக்க வகையில் கருத்துகளை தக்க முறையில் விவாதிப்பதுபோல் எழுதிச் செல்ல வேண்டும்,

# 13. ஆய்வுரை எழுதுதல்

(Thesis Writing)

மூல உண்மைக் கூறுகளைப் பகுப்பாய்வு செய்த பின் ஆய்வேட்டின் வடிவமைப்பு (Design) அமைக்கப் படுகிறது. ஆய்வுத் தலைப்பு பல இயல்களாகப் பிரிக்கப் படுகிறது. சேகரித்த மூல உண்மைக்கூறுகள்; கருத்துகள் போன்றவை பகுப்பாய்வின்போது வகை தொகை செய்யபபடுகின்றன. ஒவ்வொரு இயல் தலைப்பிற்கேற்ப அவைகளைப் பிரித்துக்கொளள வேண்டும். ஒவ்வொன்றையும் பன்முறை படித்து அதன் முக்கிய சாரத்தைத் தனியாக எழுதிக்கொள்ள வேண்டும். விளக்கம் அளிக்க வேண்டியிருப்பின், அதனைத் தனித்தாளின் விளக்கமாக எழுதிக்கொள்ள வேண்டும். பன்முறை ஆய்வுக்குறிப்புகளைப் படிக்கும் போது, புதிய கருத்துகள் நமக்குத் தோன்றினால் அவற்றையும் அவ்வடபொழுது குறித்துக்கொளள வேண்டும். மெய்ம்மைகளை நிலைநிறுத்தும் நோக்கில் உண்மைக் கூறுகள், கருத்துகள போன்றவை வளர்சசி நிலையில் அமையும் வண்ணம். அவற்றின் வைப்பு முறையைப் பேண வேண்டும்: பின்னர் ஆய்வுரை எழுதத் தொடங்க வேண்டும். ஆய்வேடு ஒரே முறையில எழுதி முடிக்கக் கூடியதன்று. குறைந்த பட்சம் மூன்று படி நிலைகளாவது எழுதிச் செம்மைப்படுத்தித் தட்டெழுத்துக்குத் தர வேண்டும்.

**முதற்படி எழுதுதல்** (Writing The First Draft)

ஆய்வாளர் முதன் முதலாக எழுதும் ஆய்வுரையின் முதற் கையெழுத்துப்படியே, பின்னர் எழுதப்

போகும் படிகளுக்கு அடிப்படையாய் அமைகின்றது. எனவே ஆய்வுரையின் முதற்படியை மிக்க கவனத்துடன் எழுத வேண்டும். சேகரித்த மூல உண்மைக் கூறுகள், கருத்துகள் இவைகளைப் பன்முறை படிப்பதால் ஏற்படும் கருத்துத் தெளிவுக்குப் பின்னரே, முதற்படியினை எழுதத் தொடங்க வேண்டும்.

## முதற்படி எழுதும்போது ஆய்வாளர் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகள்

1. மூல உண்மைக்கூறுகள், கருத்துகள், செய்திகள் போன்றவை இயல்கள், உட்தலைப்புகள் இவற்றிற் கேற்பப் பிரிக்கப்படுகின்றன. அவ்வியலில் கூறப் போகும் உண்மைகளை அல்லது மெய்ம்மைகளை உறுதிப்படுத்தும் பாங்கில் வகைதொகை செய்யப் படுவதால் ஆய்வேட்டின் முதற்படியை எழுதுதல் எளிதாகின்றது. எனவே பிரிப்பு முறையும், அவற்றின் வைப்பு முறையும் முறைப்படி உள்ளனவா? என்று சரிபார்த்த பின்னரே முதற் படியை எழுதத் தொடங்க வேண்டும்.

2. சிந்தனை ஓட்டத்திற்கும், கருத்தோட்டத்திற்கும் முதற்படியில் முக்கியத்துவம் தந்து எழுத வேண்டும். மொழித்திறன், வடிவம், இவற்றிறகு இரண்டாம் இடமே முதற்படி எழுதும்போது தர வேண்டும்.

3. மூலச்சான்றுகள், கருத்துகள் ஒருங்கிணைத்துப் பின்னப்பட்டும், அவற்றிடையே உள்ள இயைபு கள் தெளிவு பெறப்பட்டும் இருக்கும் வகையில் முதற்படியினை எழுத வேண்டும.

4. ஆய்வு மெயம்மைகளை உறுதிப்படுத்தும் நோக்கில் கருத்துகள் வளர்ச்சி பெற்றுச் செல்வதோடு, அவைகளிடையே முறையான காரண காரியத் தொடர்பு இருக்கும் வகையில் எழுதிச் செல்ல வேண்டும்.

5. நிலைநிறுத்தும் மெய்ம்மைகள் ஒருமைப்பாடு கொண்டு விளங்குவதோடு முழுமை பெற்றிருக்க வேண்டும். அதற்கேற்ப முதற்படியை எழுதும் போது கவனம் செலுத்த வேண்டும்.

6. கூற விழையும் கருத்துகள், செய்திகள் அனைத்தையும் முதற்படியில் முறையாக எழுதிச் செல்லலாம். இரண்டாம் படி எழுதும் போது அவற்றில் தேவையற்ற கருத்துகளை நீக்கி விடலாம்.

7. முன்னுரை ஆய்வேட்டின் முதலில் இடம் பெற்றாலும், ஆய்வுரையின் முதற்படி முழுவதும் எழுதப் பட்ட பின்னரே எழுதப்படுதல் நன்று.

8. முதற்படி எழுதும்போதே அடிக்குறிப்புகளை நெறி முறைப்படி எழுதிச் செல்ல வேண்டும்.

முதற்படி எழுதப்பட்ட நிலையில் அதனை மீண்டும் மீண்டும் படித்துச் செம்மைப்படுத்த வேண்டும். மேலும் ஆய்வாளர் தம் மேற்பார்வையாளரிடம் கொடுத்துச் செம்மையாக்க வேண்டும். முதற்படி எழுதும்போது விடப்பட்ட கருத்துகள், செய்திகள் இருப்பின் அவற்றைச் சேர்க்க வேண்டிய இயல் எண், உட்தலைப்பு ஆகியவற்றைக் குறித்துத் தனித்தனித் தாள்களில் எழுதி வைத்துக் கொள்ளுதல் நலம் பயக்கும். இதனால், அவற்றை இரண்டாம் படி எழுதும்போது சேர்க்க வேண்டிய இடத்தில் எளிதில் சேர்த்துக் கொள்ளலாம்.

## இரண்டாவது படி எழுதுதல்
## (Writing The Second Draft)

இரண்டாவது படி எழுதும்போது மொழித்திறனுக்கும், வடிவத்திற்கும் முக்கியத்துவம் தரவேண்டும். கூறப்படும் கருத்துகள் எளிமையும், தெளிவும் ,பெறத்

தக்க வகையில் இரண்டாவது படியை எழுதும் போது கவனம் செலுத்த வேண்டும். தேவையற்ற கருத்துகளை நீக்கிவிடலாம். ஆய்வுக்கு வலுவூட்டும் புதிய கருத்து கள் இருப்பின் சேர்த்துக் கொள்ளலாம். ஆய்வுநடை சிறப்பாக அமையவேண்டும். முன்னருள்ள இயலில் ஆய்வுநடை பற்றிக் கூறிய நெறிமுறைகளைப் பின் பற்றி எழுதுதல் நன்று. எழுத்துப்பிழை, சந்திப்பிழை, தொடர்ப்பிழை, கருத்துப்பிழை ஆகியவற்றை நீக்கி எழுத வேண்டும். கூறப்படும் கருத்துகள் முரண்பாடு கொள்ளாமல் ஆற்றொழுக்குப் போல அமைதல் வேண் டும். பத்திப் பிரிப்புகள் சீராக இருக்கும் பாங்கில் எழுதிச் செல்ல வேண்டும். கருத்துகள் தொடர்பு பெற்று இருக்கும் வண்ணம் அவற்றின் வைப்பு முறை பேணபபட்டு எழுதப்பட வேண்டும். ஒவ்வொரு சொலலையும், கருத்தையும் நன்கு தேர்ந்து, தெளிநது எழுதிச் செல்லவேண்டும்.

இவ்வாறு எழுதப்பட்ட இரண்டாம் படியையும் மேற்பார்வையாளரிடம் காண்பித்துச் செம்மை செய்து கொள்ள வேண்டும்.

## மூன்றாவது படி எழுதுதல் (Writing The Third Draft)

மூன்றாவதாக எழுதும் படியே ஆய்வாளரால் எழு தப்படும், இறுதிக் கையெழுத்துப் படியாகும். ஆய் வுரையின் இப்படியை எழுதும்போது ஒரு சில திருத்தங் களை மேற்கொள்ள வேண்டியிருக்கும் அத்திருத்தங்

களைச் சரிசெய்து மூன்றாம்படியைத் தட்டெழுத்துக்குத் தரத்தக்க நிலையில் தயார் செய்து கொள்ள வேண்டும். மூன்றாம் படி எழுதும் போதுதான் ஆய்வுரை சிறப்பும், பொலிவும் பெற்று மதிப்பு மிக்கதாக இலங்குகிறது.

## இறுதிப்படியைச் சோதித்துப் பார்த்தல்
(Checking The Final Draft)

தட்டச்சுக்குக் கொடுக்குமுன் இறுதியாக எழுதிய ஆய்வுரையின் மூன்றுவது கையெழுத்துப்படியை நனகுப் படித்து, சோதித்துப் பார்க்க வேண்டும். மேற்கோள்களும், அடிக்குறிப்புகளும் சரிவரக் குறிக்கப்பட்டிருக்க வேண்டும். ஆய்வுரையின் இறுதியாக அமையும் துணைநூற பட்டியல், அடிக்குறிபபுகளை மறுபார்வையிட டதுபோல அமைய வேண்டும். பொறுமையாக ஆய்வுரை முழுவதையும் படித்துப் பிழைகளை நீககித் தட்டச்சுக்குக் கொடுக்க வேண்டும். இறுதியாக எழுதப்பட்ட கையெழுத்துப்படியைப் பல நிலைகளில் படித்துப் பார்த்தல் இன்றியமையாதது.

## ஆய்வாளர்கள் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகள்

1. ஆய்வுரை சிறந்த முறையில், பலரும் படித்துப் புரிந்துகொள்ளும் வகையில் அமைந்துள்ளதா? என்று பார்க்க வேண்டும். ஆய்வுபபொருள் உறுதியாக்கப்பட்டதாகவும் குறிப்பிட்ட எல்லைக்குள் அமைந்துள்ளதாகவும் இருக்கிறதா? அது தெளிவாகக் குறிப்பிடப்பட்டுளளதா? என்று பார்க்க வேண்டும்.

2. ஆய்வேட்டின் நடை தெளிவாகவும், எளிமையாகவும், செம்மையாகவும் உள்ளதா? என்பதைக் கவனிக்க வேண்டும். இலக்கணப் பிழைகளை நீக்க வேண்டும். பத்திப்பிரிப்புச் சீராக அமைந்திருக்க வேண்டும். நிறுத்தக்குறியீடுகள் சரிவர, ஏற்ற இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளனவா? என்று சோதித்துப் பார்க்க வேண்டும்.

3. மேற்கோள்கள், கருத்துச் சுருக்கங்கள் சரிவர, முறையாக இடம்பெற்றுள்ளனவா? என்று பார்க்க வேண்டும்.

4. மேற்கோள், கருத்துச்சுருக்கம் இவற்றின் மேற் கோள் எண்களுக்கு ஏற்ப முறையாக அடிக் குறிப்புகள் குறிக்கப்பட்டுள்ளனவா? என்பதை ஒரு முறை கவனத்துடன் பார்க்க வேண்டும்.

5. ஆய்வுக்குப் பயன்பட்ட அனைத்து நூல்களும், கட்டுரைகளும் இறுதித் துணைநூற்பட்டியலில் முறையாக இடம்பெற வேண்டும். நிறுத்தக் குறியீடுகளைச் சரிவரக் குறிக்க வேண்டும்.

6. அடிக்குறிப்புகளும், துணைநூற்பட்டியலும் அமைய வேண்டிய இடத்தில் அமைந்துள்ளனவா? என்ப தைக் கவனிக்க வேண்டும்.

7. ஆய்வுரையின் அறிமுகம் தெளிவாக அமைந் துள்ளதா என்று பார்க்க வேண்டும். ஆய்வுரையில் கருத்துகள் உண்மை காணும் நோககில் முறை யாக இடம் பெற்றிருக்க வேண்டும். முடிவுரை அல்லது தொகுப்புரை ஆய்வுரையின் சாரமாக— மதிப்பீடாக அமைந்துள்ளதா? என்றும் பார்க்க வேண்டும்.

8. ஆய்வுரைக்கு வலிவூட்டும் பாங்கில் கருத்துச் சுருக்கங்களும், மேற்கோள்களும் இடம்பெற வேண்டும்.

ஆய்வுரையோடு தொடர்பில்லாதவைகள் எத்தகைய சிறப்புகளை உடையனவாக இருந்தாலும் அவற்றை நீக்க வேண்டும்.

மேற்கூறப்பட்டபல நோக்குகளிலும் ஆய்வுரை யின் இறுதிக் கையெழுத்துப் படியைச் சோதித்துப் பார்க்கவேண்டும். ஒவ்வொரு நோக்கிலும் இடம்பெறும்

குறைகளை நீக்கவேண்டி, ஒவ்வோரு நோக்கிற்கும் ஒரு முறையென, கூறப்பட்ட பல நோக்குகளிலும் அமைவும் பிழைகளைத் திருத்த வேண்டி, பொறுமையாகப் பன் முறை படித்து, குறைகளைக் களைந்து, இறுதிக் கையெத்துப் படியைத் தட்டெழுத்துச் செய்யத் தர வேண்டும்.

# 14. தட்டெழுத்தும் கட்டமைப்பும்

(Typing and Binding)

ஆய்வுரை நல்ல முறையில், தட்டச்சுச் செய்யப்பட வேண்டும். ஆய்வேடுகளைத் தட்டெழுத்துச் செய்து பழக்கமுள்ள—அனுபவமுள்ள தட்டெழுத்தரிடம் ஆய்வுரைக் கையெழுத்துப்படியைக் கொடுத்துத் தட்டச்சுச் செய்ய வேண்டும். அப்பொழுதுதான் ஆய் வுரை ஆய்வு நெறிகளின் அடிப்படையில் சிறப்பாக அமையும். பின்னர் நன் முறையில் கட்டமைப்புச் செய்பவரிடம் தட்டெழுத்துப் படிகளைக் கொடுத்துக் கட்டமைப்புச் செய்ய வேண்டும்.

## ஆய்வுரைத் தாள் (Thesis Paper)

நல்ல, தரமுடைய பாண்டுத் தாளில் (Bond Paper) ஆய்வேடு தட்டெழுத்துச் செய்யப்பட வேண்டும். 11" × 8" அளவுள்ள பாண்டுத்தாளே ஏற்றது. தட்டெழுத்துக்கான கார்பன் தாளும், நாடாவும தர முடையனவாகவும், புதியனவாகவும் இருக்க வேண் டும். பல்கலைக் கழகத்திற்கு எத்தனை ஆய்வுரைப்படி களை அளிக்க வேண்டுமோ, அத்துடன் ஆய்வாளர் தமக்கென ஒரு படியையும் சேர்த்து தட்டெழுத்துச் செய்து கொள்ள வேண்டும் கார்பன தாளில் அமை யும் தட்டெழுத்தின் இறுதிப்படியை ஆய்வாளர் தமக் கென வைத்துக்கொண்டு, ஏனையவற்றைப் பலகலைக் கழகத்திற்கு அளிக்க வேண்டும்.

## ஓரப்பகுதிகள் (Margins)

தையற் கட்டுக்கு ஏற்றவகையில் இடது பக்கத்தில் 40 mm இடம் விட்டும், வலது பக்கத்தில் 20 mm இடம்

விட்டும், மேலும் கீழும் ஏறக்குறைய 25 mm இடம் விட்டும் ஆய்வுரை தட்டெழுத்துச் செய்யப்பட வேண்டும்.

## இடைவெளி (Space)

ஆய்வுரைப் பகுதியின் உடற் பகுதி ஈரலகு இடைவெளி விட்டும், மேற்கோள்கள் அடிக்குறிப்புகள் ஓரலகு இடைவெளி விட்டும் தட்டெழுத்துச் செய்யப்பட வேண்டும். மேற்கோளை எழுதும்போது ஆய்வுப் பகுதியிலிருந்து ஐந்தலகு இடைவெளி விட்டுத் தொடங்க வேண்டும். மேற்கோளை அடுத்து ஆய்வுப் பகுதியை எழுதும்போது ஐந்தலகு இடைவெளி விடவேண்டும்.

## தலைப்புகள் (Topics)

இயல்களுக்குப் பொருத்தமான, சுருக்கமான தலைப்பிடவேண்டும். இயல் தலைப்பை மேலிருந்து 20 mm இடம் விட்டு, மையப்படுத்தித் தட்டெழுத்துச் செய்ய வேண்டும். கட்டுரைத் தொடக்கம் இயல் தலைப்பிலிருந்து மூன்றலகு இடம் விட்டு அமைய வேண்டும். இயல் தலைப்பு ஒவ்வொன்றையும் சிறப்பாக—எடுப்பாகக் காட்டவேண்டித் தனித் தாளில் தட்டெழுத்துச் செய்யப்பட்டு, அவ்வவ்வியல தொடக்கப் பக்கத்திற்கு முனனர் வைக்கும் வழக்கத்தை, இன்றைய நடைமுறையில் நாம் காணலாம். இயல் உட்பிரிவுத் தலைப்புகளை இடப்பகுதி ஓரத்திலிருந்து தட்டெழுத்துச் செய்து அடிக்கோடிட்டுக் காட்ட வேண்டும். பின்னிணைப்புகளின் தலைப்புகளையும் இயல் தலைப்புகளைப் போலவே புதிய பக்கத்தில் மேலிருந்து 20 mm இடம் விட்டு, மையப்படுத்தித் தட்டெழுத்துச் செய்ய வேண்டும். அட்டவணைகள் (Tables), விளக்கப் படங்கள் (Charts) இவற்றின் தலைப்புகளை, அட்டவணைகள் அல்லது

விளக்கப் படங்கள் இவற்றிற்கு நேர் மேலாக மையப் படுத்தித் தட்டெழுத்துச் செய்யவேண்டும். புகைப் படமாயின் (Photography) அதன் விவரத்தை அல்லது தலைப்பை, அதற்குக் கீழே மையப்படுத்தி எழுத வேண்டும்.

## தட்டெழுத்துப் படிகளைத் திருத்துதல்
## (Proof Reading The Typed Copies)

ஆய்வுரை தட்டெழுத்துச் செய்யப்பட்ட பின்னர்* ஒவ்வொரு பக்கத்தையும் கவனமாகப் படித்துப் பிழைகளைத் திருத்த வேண்டும். தட்டெழுத்தாளரால் சில எழுத்துப் பிழைகள், வாக்கியப் பிழைகள் நிகழலாம். குறிப்பாக, சொற்களின் உள்ளாக வரும் எழுத்துப் பிழைகள் நிகழக்கூடும். ஒரு பக்கத்தில் ஒன்றிரண்டு பிழைகள் இருந்தால் இந்தியன் மை நிரப்பப்பட்ட எழுது கோலால் கவனமாகத் திருத்த வேண்டும். திருத்திய எழுத்து வடிவம் தட்டெழுத்து வடிவம் போலவே இருக்கும்படிக் கவனமாக நிறுத்தி எழுதவேண்டும். இரண்டுக்கு மேற்பட்ட பிழைகள் அல்லது சொற்கள் அல்லது சொற்றொடர் விடப்பட்டிருப்பின் உடனடியாக அப்பக்கத்தைத் தட்டெழுத்தரிடம் கொடுத்துப் பிழையில்லாமல் புதிய மறுபடியினைத் தட்டெழுத்துச் செய்து பெற்றுக்கொள்ள வேண்டும். அட்டவணைகளின் பட்டியல், விளக்கப் படங்களின் பட்டியல் சரியான இடங்களில் அவற்றில் குறிக்கப்பட்ட எண் வரிசைக்கேற்ப இடம் பெற்றுள்ளனவா? என்று பார்க்க வேண்டும். ஆய்வேட்டின் முன்பகுதி, ஆய்வுரையின் உடற்பகுதி, பின்னிணைப்புகள், துணை நூற்பட்டியல் போன்றவைகளில் இடம் பெறுவன அனைத்தும் முறைப்படி அமைந்துள்ளனவா? என்று பார்த்தல் மிகவும் முக்கியமானது.

## கட்டமைப்புச் செய்தல் (Binding)

பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப்படும் ஆய்வேடுகளைக் கட்டமைப்புச் செய்து அனுபவம் பெற்றுள்ள கட்டமைப்புச் செய்பவரிடம் (Binder) ஆய்வுரைத் தட்டெழுத்துப்படிகளைக் கொடுத்துக் கட்டமைப்புச செய்ய வேண்டும். அழகும், சிறப்பும் பெருகும் வகையில் ஆய்வுரை, கட்டமைப்புச் செய்யப்பட வேண்டும்.

# 15. வாய்மொழித் தேர்வு

(Viva Voce)

ஆய்வின் வளர்ச்சிப்படிகளில் இறுதியாக இடம் பெறுவது வாய்மொழித் தேர்வாகும். ஆய்வாளரால் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெற்ற ஆய்வுரை, தேர்வாளர்களால் மதிப்பீடு செய்யப்பட்ட பிறகு, ஆய்வுரைத் தொடர்பாக வாய்மொழித்தேர்வு நடை பெறும். நேர்காணல் குழுவில் ஆய்வாளரின் துறைத் தலைவரும், மற்றும் அசகுறிப்பிட்ட துறைத் தொடர் புடைய முக்கியமான ஆசிரியர்களும், வேறு பல்கலைக் கழகத்திலிருந்து வரும் தேர்வாளர்களும் இடம் பெறுவா. ஆய்வேட்டை மதிப்பீடு செய்த தேர் வாளர்கள் சிறப்பாக இடம்பெறுவர். இவர்களைத் தவிர அக்குறிப்பிட்ட துறையில் ஆர்வமுள்ள பொதுப் பார்வையாளர்கள் கலந்துகொள்ளும் வாய்ப்பை இப்போது பல்கலைக்கழகங்கள் அனுமதித்துளளன. இவ்வாறு பார்வையாளர்களும் கலந்துகொள்ளும் வகையில் அமையும் வாய்மொழித் தேர்வு (Public Viva-Voce) என்று அழைக்கப்படுகின்றது.

## வாய்மொழித் தேர்வின் நோக்கங்கள்

1. ஆய்வுரையில் கூறப்படும் ஆய்வு உண்மைகளை அல்லது கண்டுபிடிப்புகளை உறுதிப்படுத்தும் (authenticity) நோக்கில் நடத்தப்படுகிறது. ஆய்வின்மூலம் கண்டறிந்த உண்மைகள் அல்லது கண்டு பிடிப்புகள், ஆய்வாளரின் தன் முயறசியின் பயனுய் விளைந்தவை என்பதை நிலைநிறுத்த வைப்பது வாய்மொழித் தேர்வு ஆகும். இவற்றை அறிய, ஆய்வாளரிடம் ஆய்வுப் பகுதிகளோடு

நெருங்கிய தொடர்புடைய கேள்விகள் தேர்வாளர்களால் வாய்மொழித் தேர்வின் போது கேட்கப்படுகின்றன.

2. ஆய்வாளர் எப்பாடத்துறையைச் சார்ந்தவராக இருக்கின்றாரோ, அத்துறையில் அவருடைய பரந்து பட்ட அறிவைச் சோதிக்க வழி வகுப்பது வாய்மொழித் தேர்வாகும்.

3. ஆய்வாளரின் கருத்துகள் ஆய்வுரையில் இடம் பெறுகின்றன. உண்மைகளை அல்லது கண்டுபிடிப்புகளை உறுதிப்படுத்தும் பாங்கினைத் தமது ஆய்வுரையில் தந்திருப்பார். இவைகளைப்பற்றித் தேவை ஏற்படின், நேரடியாக ஆய்வாளரே விளக்கவும், தெளிவாக்கவும் வாய்ப்பை நல்குவது வாய்மொழித் தேர்வே ஆகும்.

4. ஆய்வில் ஆய்வாளர் பின்பற்றிய ஆய்வு அணுகுமுறைகள், புதிய உத்திகள், ஆய்வு நுணுக்கங்கள் போன்றவற்றைப் பற்றிய அவரது உள்ளக் கருத்துகளை வெளிக்கொணரும் அரிய வாய்ப்பை வாய்மொழித் தேர்வு அளிக்கிறது.

5. ஆய்வுரையில் கூறப்பட்ட ஆய்வு உண்மைகள் ஆய்வாளர் அளிக்கும் விளக்கத்தால் நிலைநிறுத்தப்படுகின்றன. அத்துடன் ஆய்வாளர் ஆய்வு மேற்கொண்ட பாடத்துறையில் வல்லவர் என்ற தகுதியை நிர்ணயிப்பதும் வாய்மொழித் தேர்வே ஆகும்.

6. ஆய்வாளரின் ஆய்வுரை சிறந்த தரமுடையது என்பதை ஏற்க வைப்பதும் அல்லது இன்னும் குறைகள் சில உண்டு என்பதை உணர வைப்பதும் வாய்மொழித் தேர்வு ஆகும்.

7. குறிப்பிட்ட ஆய்வுக்களத்தில் ஆய்வாளரின் தகுதியும் திறமையும் நிர்ணயிக்கப்படுவதால் அக் குறிப்பிட்ட பாடத்துறையில், மேலும் ஆய்வு மேற்கொள்ள வேண்டும் என்ற உயரிய ஆர்வத்தை ஆய்வாளருக்கு நல்குவது வாய் மொழித் தேர்வு ஆகும்.

## வாய்மொழித் தேர்வும் ஆய்வாளரும்

பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப்பெற்ற ஆய்வுரையினைத் தேர்வாளர்கள் மதிப்பீடு செய்கின்றனர். மதிப்பீடு செய்யப்பட்டதும் பல்கலைக்கழகம் ஆய்வாளருக்குத் வாய்மொழித் தேர்வு நடைபெறும் நாளை அறிவிக்கிறது. வாய்மொழித் தேர்வுக குழுவில் ஆய்வுரையினை மதிபபீடு செய்த தேர்வாளர்கள் முககியமாக இடம்பெறுவர். வாய்மொழித் தேர்வுக்காக, ஆய்வாளர் தம் ஆய்வுரையினைக் கட்டாயம பல முறை படிக்க வேண்டும். தேர்வாளர்கள் கேட்கும் வினாக் களுக்கெலலாம் தக்க முறையில் சிறப்பாகப் பதிலளிக்கும பாங்கில, ஆய்வாளர் தம்மைத் தயாராக் கிக்கொள்ள வேண்டும். ஆய்வேட்டினைப் படிக்கும் போது எத்தகைய கேள்விகள் தம்முடைய ஆய்வுரைத் தொடர்பாக இடமபெறக்கூடும் என்பதை ஆயவாளரே சிந்தித்துப் பார்க்க வேண்டும. ஒவ்வொரு கேள்விக்கும் எத்தகைய பதில்களை, எவ்வாறு விளக்கமாகவும், தெளிவாகவும் தேர்வாளர்கள் ஏற்றுக்கொள்ளும் பாங்கில் கூற வேண்டும் என்பதை முன்கூட்டிய ஒத்திகை செய்து பார்த்துக்கொள்ள வேண்டும். ஆய்வாளரின் கருத்துகளும ஆய்வேட்டில் இடம் பெறும். அத்தகைய கருத்துகள் பற்றிய வினாக்களும் வாய்மொழித் தேர்வினபோது கேட்கப்படலாம. அபபோது ஆய்வாளர் அக்குறிபபிட்ட கருத்தை நிலை நாட்ட, அக்கருத்தோடு தொடர்புடைய எத்தகைய மூல உண்மைச்சான்றுகளைக் கூற வேண்டும் எனபதை

முன் கூட்டியே சிந்தித்துத் தம்மை வாய்மொழித் தேர்வுக்குத் தயார் படுத்திக் கொள்ள வேண்டும்.

வாய்மொழித் தேர்வுக் குழுவினருக்கு நல்லெண்ணத்தை ஏற்படுத்தும் பாங்கில் ஆய்வாளரின் புறத் தோற்றம் சார்ந்த ஒழுகலாறுகள் அமைய வேண்டுமாதலால், அதற்கேற்ப நடந்துகொள்ள வேண்டும். ஆய்வாளர் தம்முடைய ஆய்வைத் திறம்பட நிகழ்த்தி, ஆய்வின் மூலம் கண்டறிந்த உண்மைகளைப் பலருக்கும் பயன்படும் பாங்கில் ஆய்வேடாகப் பல்கலைக் கழகத் திற்கு அளிக்கிறார். அதன் பின்னர் நடைபெறும் வாய்மொழித் தேர்வு சில சிக்கல்களைத் தோற்றுவிக்கவும் கூடும். எனவே வாய்மொழித் தேர்வுக்காகச் செல்லும் ஆய்வாளர் தம் ஆய்வுத் தலைப்புத் தொடர்பாக, வாய்மொழித் தேர்வுக் குழுவில் இடம்பெறும் அறிஞர்களைவிட அதிகமான செய்திகளையும், கருத்துகளையும் அறிந்து வைத்துக் கொள்ளுதல் நலம் பயக்கும்.

# 16. இலக்கிய ஆய்வு நோக்குகள்

நோககே பாலே அளவியல் எனு அ
... ... ... ...
நல்லிசைப் புலவர் செய்யுள் உறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்தரைத் தனரே

(தொல். செய்யுளியல், நூற்பா. 1.)

என்ற நூற்பாவில் தொல்காப்பியர் குறிப்பிடும் 'நோக்கு' என்பது செய்யுளுக்கு மட்டும் உரித்தன்று; ஆய்வுக்கும் உரியதாகும்.

## ஆய்வு நோக்குகள்

இலக்கிய ஆய்வு நோக்குகளைப் பலவகையாகப் பிரிக்கலாம். அவையாவன;

1. வண்ணனை நோக்கு
2. வரலாற்று நோக்கு
3. உளவியல் நோக்கு
4. தத்துவ நோக்கு
5. சமுதாய நோக்கு
6. மொழியியல் நோக்கு

என்பனவாகும். இவை ஒவ்வொன்று பற்றியும் விளக்கமாகக் காண்போம்.

## வண்ணனை நோக்கு

வண்ணனை நோக்கில் இலக்கியங்களை ஆராயலாம். இலக்கியம் எவ்வாறு தோன்றியது? ஏன் தோன்றியது?

எதற்காகத் தோன்றியது? இலக்கியத்தின் அமைப்பு யாது? என்ற பல கோணங்களில் இலக்கியங்களை ஆராயலாம். அக இலக்கியங்கள், புற இலக்கியங்கள், பக்தி இலக்கியங்கள், காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள், தற்கால இலக்கியங்களான புதின இலக்கியங்கள், சிறுகதை இலக்கியங்கள், நாடக இலக்கியங்கள் போன்ற பல்வேறு காலங்களில் தோன்றிய இலக்கிய வகைகளின் தோற்றத்திற்கான அடிப்படைக் காரணங்கள், சூழல்கள், அமைப்புக் குறித்து ஆய்வதே வண்ணனை ஆய்வு நோக்கு என அழைக்கப்படுகின்றது. உதாரணமாக,

'சங்க காலத்தில் தமிழ் இலக்கியம்'

'சங்க இலக்கிய யாப்பு'

'தமிழில் அற இலக்கியங்கள்'

'பக்தி இலக்கியங்கள்'

'தமிழ்க் காப்பியங்கள்'

'தமிழில் குழந்தை இலக்கியங்கள்'

'பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ்க்கவிதைகள்'

'பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ்ச் சிறுகதைகள்'

'பத்தொன்பதாம் நூற்றாண்டு புதினங்கள்'

'தமிழில் பட்டரங்கப் பாடல்கள்'

என்ற தலைப்புகளை ஆய்வுப் பொருள்களாகக் கொள்வோமேயானால் அவை ஒவ்வொன்றின் தோற்றம், அமைப்பு போன்றவை குறித்து வண்ணனை ஆய்வு நோக்கு மூலமாக ஆராயலாம்.

**வண்ணனை நோக்கு ஆய்வின் பயன்கள்**

1. ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு வகையான இலக்கியங்கள் தோன்றுகின்றன. ஒரு குறிப்பிட்ட

காலத்தில் ஒரு குறிப்பிட்ட வகையான இலக்கியம் தோன்றுவதற்கான நிலைகளை வண்ணனை நோக்கு ஆய்வின் மூலமாக அறிந்து கொள்ளலாம்.

## வரலாற்று ஆய்வு நோக்கு

2. குறிப்பிட்ட காலத்தில் தோன்றிய இலக்கிய வகையின் அமைப்புப் பாங்கினை இத்தகைய ஆய்வு நோக்கின் மூலமாக தெரிந்து கொள்ளலாம்.

வரலாற்று நோக்கிலும் இலக்கியங்களை ஆராய லாம். இலக்கியங்கள் வளர்ந்த முறையில் மேற் கொள்ளும் ஆய்வு நோக்கே வரலாற்று ஆய்வு நோக்கு எனப்படும். உதாரணமாக, கம்பராமாயணத்தின் வளர்ச்சி நிலை குறித்து ஆய்வதாக வைத்துக் கொள் வோம். கம்பருககு முன்னால இராமாயண காவியத்தின் நிலை யாது? அதன் கிளைக் கதைகள் எவ்வாறு வளர்ச்சி யடைந்தன? கம்பருக்குப் பின்னால அக்காவியத்தின் நிலை யாது? என்ற கோணங்களில் அக்காவியத்தின் வளர்ச்சி நிலையை ஆராயலாம். வரலாற்றுப் போக்கில் இலக்கியத்தின் வளர்ந்த நிலையை ஆராயும் இந்நோக்கு வரலாற்று ஆய்வு நோக்கு எனப் பெயர் பெறும். உதாரணமாக.

"முருக வழிபாட்டின் தோற்றமும் வளர்ச்சியும்"

"தமிழகத்தில் சைவ சமயத்தின் வளர்ச்சி"

"தமிழகத்தில் வைணவ சமயத்தின் வளர்ச்சி"

"வாய்மொழி இலக்கியத்தின் தோற்றமும் வளர்ச்சி யும்"

"தமிழ் வினைச்சொற்களின் தோற்றமும் வளர்ச்சி யும்"

"உலா இலக்கியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்" போன்ற தலைப்புகளில் வரலாற்று ஆய்வு நோக்கில் ஆய்வினை மேற்கொளளலாம்.

இலக்கியத் துறையில் முதன் முதலில் மேற்கூறிய வண்ணனை ஆய்வு நோக்கு, வரலாற்று ஆய்வு நோக்கு என்ற இருவகையான ஆய்வு நோக்கு வகைகளே இருந்தன. ஆய்வின் வளர்ச்சிப் பாங்கில் எல்லாத் துறையினரும் ஒரு குறிப்பிட்ட துறை சார்ந்த நிலையில் தத்னித்து நின்று. மேற்கொள்ளும் ஆய்வின் உண்மைச் கண்டுபிடிப்புகளை உணர முடியாது என்ற அருங் கருத்தை உணரத்தலைப்பட்டனர். எனவே, மேற் கொள்ளும் ஆய்வோடு தொடர்பு கொண்ட வேற்றுத் துறைகளின் துணையை நாட முற்பட்டனர். இம்முயற் சியே ஆய்வின் நோக்குகள் பெருகவும், ஆய்வு வளர்ச்சி பெறவும் வழிகோலியது எனலாம். வேற்றுத் துறை களின் துணையால் வளர்ந்த ஆய்வு நோக்குகள் ஆராய்ச்சியாளர்களின் எளிமைக்காகவும், நன்மை களுக்காகவும் தெரிதும் பயன்பட்டன. இலக்கியம் பிறதுறை அறிவு கொண்டு ஆராயப்பட்டது. ஆற்வியல் கொள்கையை இலக்கியத்துறை ஆய்வில் புகுத்தப்பட்டன. இதனால் இலக்கிய ஆய்வு மேன் மேலும் வளர்ச்சி பெறலாயிற்று. அறிவியல் ஆய்வு நோக்கு, இலக்கியத்துறை ஆய்வில் கொண்டுள்ள தொடர்பை ஒரு உதாரணத்தின் மூலம் விளக்குவோம். சிலப்பதிகாரத்தில் கட்டுரைகாதையில் வரும்

> **ஆடித் திங்கள் பேரிருள் பக்கத்து**
> **அழல்சேர் குட்டத் தட்டமி ஞான்று**
> **வெள்ளி வாரத்து எள்ளெரி உண்ண**
> **உரைசால் மதுரையோடு அரைசுகே டுறுமெனும்**
> **உரையும் உண்டே**
>
> ***சிலம்பு : கட்டுரைகாதை : 133-137***

என்ற அடிகளில் சேரர் குலச் செம்மல் இளங்கோவடி கள் வானவியல் கருத்துகளை குறிப்பிட்டுள்ளார். இப் பகுதியை ஆய்வு மேற்கொள்வோர் வானவியல் வல்லுநர்களின் துணைகொண்டு நுணுகி ஆராய

விழைதல் வேண்டும். அப்போதுதான் இளங்கோவடிகளார் மேற்கண்ட அடிகளில உணர்த்தும் உண்மையை அறிந்து கொள்ள முடியும்; ஆய்வும் சிறப்புறும். இலக்கியத்துறை ஆய்வில், அறிவியல் நோக்கு ஆய்வின் பெரும் பங்கினை மேற்கண்ட உதாரணத்தின் மூலமாக உய்த்துணரலாம்.

### அறிவியல் ஆய்வு நோக்கின் பயன்

1. இலக்கியப் படைப்பாளர் நுணுக்கமாகக் குறிப்பிடும் அறிவியல் உண்மைகளை வெளிக் கொணா அறிவியல் ஆல்வு நோக்கு வழிவகுக்கிறது.

### உளவியல் நோக்கு

படைப்பாளனின் உளப்பாங்கு, அவன் படைக்கும் படைப்புகளில் இயல்பாகவே அமைந்துவிடுகின்றது. இலக்கியத்தைப் படிப்போரும் ஆராய்வோரும் படைப்பாளனின் உளப்பாங்கினை அறிய வேண்டுவது இன்றியமையாததாகிறது. எனவே, இலக்கிய ஆய்வில் படைப்பாளனின் மன நிலையை அறிய நிகழ்த்தும் ஆய்வு நோக்கே உளவியல் ஆய்வு நோக்கு எனப் படும்.

இலக்கியப் படைப்பாளனும், இலக்கியத்தை அணுகிப் படிப்போரும், ஆய்வோரும் மனித மன மாறுபாடுகளுக்கு ஆட்பட்டவர்களே. மனித மன மாறுபாட்டுக்கு ஏற்பவே படைப்புப் பொருளும், துய்க்கும் வகையும், முறையும் மாறுபடும் என்பதை அறிய வேண்டும். உணர்வுகளின் அடிப்படையில் இலக்கியப் படைப்பாளனும், துய்ப்போனும் கூட்டுக் கலபாகத் திகழ்கிறார்கள. எனவே இலக்கியப் படைப்பு களில் உள்ளார்ந்து விளங்கும் படைபபாளியின் உளப் பாங்கினை இத்தகைய உளவியல் ஆய்வு நோக்கு மூலமே ஆய்வாளர் அறிந்து கொள்ள முடியும்; பயன் துய்ககவும் முடியும்.

சங்க இலக்கியம அகம் புறம் என இரு பகுப்பு களாக அடங்கும் அகம் புறம் என்ற பகுபபுகளைச் சற்று நுணுகி நோக்குவோமேயானால், அத்தகைய பாகுபாடு உளவியல் அடிப்படையில் பகுக்கப்பட்டது என்ற உண்மை தெள்ளிதிற் புலப்படும். ஒருவனும் ஒருத்தியும் வாழும் அகவாழ்வுச் செய்திகளை அக இலக்கியங்களில் அகவாழ்வுக் கூறுகளும், புற இலக்கியங்களில புற வாழவுக் கூறுகளும் பொதுந் துள்ளமை கொண்டே, உளவியல் பாங்கில் சங்க இலக்கியம் அகம், புறம் என இரு பகுப்புகளாக அமைக்கப்பட்டது என்ற உண்மை புலப்படும். சங்க இலக்கியம் பற்றி டாக்டர் தமிழண்ணல் அவர்கள்,

> "சங்க இலக்கியத்திற்குப் பிறிதொரு பெயர் சூட்டுக என்று கேட்டால் தயங்காமல் 'உளவியல் இலக்கியம்' எனக் குறிப்பிடலாம். அகத்திணைப் பாடல்கள நூற்றுக்கு நூறும் புறத்திணைப் பாடல்கள், நூற்றுககு எழுபத்தைந்தும் உளவியல் பற்றியனவே ஆகும். ஏதேனும ஒரு மனநிலையை மட்டுமே அலலது அம்மனநிலை விளைவுக்கு உரிய சூழலை மட்டுமே அவை பாடு பொருளாய்க் கொண்டவை"[1]

எனக் கூறும் கருத்து ஈண்டு நினைவுகொள்ளத் தக்கதாகும். இலககியக் கட்டமைப்பில் மட்டுமின்றி சொல்லாட்சிகள், இயற்கைப் புனைவு, வருணனைகள் ஆகியவற்றிலும் படைப்பாளனின படைபபாக்க உளவியல் பாங்கினைக் காணலாம; களிக்கலாம். இலக்கியக் கூறுகளான கற்பனை (Imagination) உணர்சசி (Emotion) வடிவம் (Form) கருத்து (intellectual (Element) ஆகியவற்றிலும் உளவியல பாங்கின் உன்னதத்தைக் காணலாம்.

---

1. இராம. பெரியகருப்பன், சங்க இலக்கிய ஒப்பீடு. ப, 212.

சங்க இலக்கிய அகத்திணை பற்றி ஆராய்ந்த டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் உளவியல் ஆய்வுநோக்கு தம் ஆய்வுக்கு பயன்பட்ட பாங்கினைத் தமது 'தமிழ்க்காதல்' என்ற நூலில்,

> "அகத்திணைக்குப்பாடுபொருள் காதலாதலின், காதல் உள்ளத்தோடு இயைந்ததாலின், இந்நூலாராய்ச்சி பெரும்பான்மை உளவியல் பிடித்துச்செல்வதாகும் என்று குறிக்கொள்க. நெஞ்சகளத்து விளையாடுங் காதலை ஆய்பொருளாகக் கொண்டவர்க்கும் பாலுளக்கல்வி. ஆண் பெண் காமம் பற்றிய பாலறிவு தெரிய வேண்டும்"

எனவும்

> "என் ஆராய்ச்சிக்குத் தலையாய நெறி உளவியல் மேற்றாகலின், அகப்பாட்டின் இலக்கிய வனப்பை ஈண்டுப் பெரிதும் கூறிற்றிலன். அகப் புலவர்களை ஆராயுங்காலும் காதல் மாந்தரின் பாலுணர்ச்சிகளைப் புலப்படுத்துய் ஆற்றல் ஆன்றோர் எவ்வளவு உடையர் என்பது குறித்து விளக்கம் செய்தேன்"

எனவும் கூறும் கருத்துகள் விளக்குவதாகும்.

இலக்கிய ஆய்வாளரின் உளநிலை, வயது, கல்வித் தகுதி, ஆர்வம், ஈடுபாட்டுணர்வு போன்ற பல் கூறுகளும் உளவியலோடு தொடர்புடைய கூறுகளாகும், இலக்கிய ஆய்வாளனின் உளவியல் தன்மைகள்—இயல்புகள் இக்கூறுகளால் மாறுபட வாய்ப்புண்டு.

உளவியல் ஆய்வுநோக்கில் படைப்பிலக்கியங்களை ஆராய்வதே சிறப்புடைத்து. இலக்கிய ஆய்வுக்கு உளவியல் ஆய்வு முறைகள் பெரிதும் பயன்படுகின்றன உதாரணமாக.

---

1. வ. சுப. மாணிக்கம், தமிழ்க் காதல், ப. 23
2. மேற்படி ப 24

"தமிழ் இலக்கியத்தில் போர்க்கலை"

"தமிழ் இலக்கியத்தில் கற்பு"

"சங்க இலக்கியத்தில் மெய்ப்பாடுகள்"

போன்ற தலைப்புகளில் அமையும் ஆய்வு நோக்கு உளவியல் ஆய்வு நோக்கின்பாற்பட்டதாகும்.

## உளவியல் ஆய்வு நோக்கின் பயன்கள்

1. இலக்கியப் படைப்பாளனின் உளநுட்பங்காண உளவியல் ஆய்வு நோக்குப் பயன்படுகிறது.

2. மூல நூலாசிரியர், வழி நூலாசிரியர், உரையாசிரியர், மொழிபெயர்ப்பு ஆசிரியர் ஆகியோரின் உளப் பாங்கினை ஆய்ந்துணர இவ்வாய்வு வழிகோலுகிறது.

3. இலக்கியக் கூறுகளின் ஊடே விளங்கும் முரண்பாடுகளையும், தொடர்புகளையும் உளவியல் ஆய்வு நோக்கால் ஆய்ந்தறியலாம்.

4. இலக்கியக் கூறுகளோடு கொண்டுள்ள தொடர்புகள் முரண்பாடுகள் ஆகியவை பற்றியும் அறிய இம்முறை ஆய்வு பயன்படுகிறது.

## தத்துவ ஆய்வு நோக்கு

இலக்கியப் படைப்புகளில் தத்துவக் கருத்துகளும் இடம்பெறுகின்றன. தத்துவக் கோட்பாடுகளின் அடிப்படையில் இலக்கியங்களில் காணப்படும் தத்துவக் கருத்துகளை ஆய்வதற்குப் பயன்படும் நோக்கே தத்துவ ஆய்வு நோக்கு ஆகும். பக்தி இலக்கியங்களை ஆராய்வதற்குத் தத்துவ ஆய்வு நோக்குப் பெரிதும் பயன்படும். தத்துவத் துறையில் வல்ல பேரறிஞர்களின் துணை கொண்டு இங்நோக்கு ஆய்வின் மூலம், பக்தி இலக்கியங்கள் புலப்படுத்தும் தத்துவ உண்மைகளைக் கண்டறியலாம். பேராசிரியர் சுந்தரம் பிள்ளை

யின் மனோன்மணீய நாடகத்தில் 'சிவகாமி சரிதம்' என்னும் இணைக்கதை இடம் பெற்றுள்ளது. இவ் விளைக்கதையில் பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள் அரும்பெரும் தத்துவக் கருத்துகளை உணர்த்தியுள்ளார். சிதம்பரம் என்னும் இறைவனும், சிவகாமி என்னும் உயிரும் இரண்டறக் கலந்த தத்துவக் சருத்தை,

**சிவகாமி யானுனது சிதம்பரனே என்னச்**
**செப்புமுனம் இருவருமற் றோருருவம் ஆனார்**

மனோன்:

என்ற அடிகளில் உணர்த்துகிறார் பேராசிரியர் சுந்தரனார். இக் கருத்தினை தத்துவ நோக்கு முறையில் சைவ சமயக் கருத்துகளோடு ஆராய்ந்தால் ஆசிரியர் உணர்த்தும் தத்துவக் கருத்தின் உண்மை துலங்கும்.

"சித்தர் பாடல்களில் தத்துவம்"

"சைவ சித்தாந்தம்"

"திருஞானசம்பந்தர் தேவாரம்"

"அப்பர் தேவாரம்"

போன்ற ஆய்வுத் தலைப்புகளை ஆய்வுப் பொருளாகக் கொண்டோர்க்குத் தத்துவ ஆய்வு நோக்குப் பெரிதும் பயன்படும். தத்துவக் கருத்துக்களஞ்சியமாக விளங் கும் சமய நூல்களை ஆராய்வதற்கு, இத்தகைய நோக்கு முறை ஆய்வு தேவைப்படுகின்றது.

## சமுதாய ஆய்வு நோக்கு

சமுதாய ஆய்வு நோக்கு மூலமாக இலக்கியங்களை ஆராயலாம். இலக்கியங்கள் புலப்படுத்தும் சமுதாயச் செய்திகளையும் உணர்வுகளையும் கண்டறியலாம். இலக்கியம் சமுதாய உணர்வுகளின் உந்தல் அடிப்படையில் முகிழ்க்

கிறது. ரெனிவெல்லாக் குளோறியா சுந்தரமதி என்பவர், 'இலக்கியம் ஒரு சமுதாய நிலயம்' எனக் கூறும் கருத்து ஈண்டு நினைவு கொள்ளத்தக்கது. சமுதாயத்திலிருந்து சமுதாயத்திற்காகத் தோன்றும் இலக்கியம் சமுதாயத்தோடு பின்னிப் பிணைந்து விளங்குகிறது. இந் நோக்கு முறை ஆய்வு மூலமாக இலக்கியம் படைப்பாளனுக்கும், இலக்கியத்திற்கும், சமுதாயத்திற்கும் இடையே விளங்கும் நெருங்கிய தொடர்பை ஆய்ந்து கண்டறியலாம். மேலும் இலக்கியப் படைபபாளனின் இயல்புகளையும், எண்ணங் களையும் ஆராயலாம். இலக்கிய ஆசிரியரின் சமுதாயச் சிந்தனைகள், சமுதாயக் கொள்கைகள், சமுதாயத்திற்கு அவன் கூறும் நல்லறிவுரைகள், சமுதாயம் அவனுக்கு விதித்திருக்கும் கட்டுப்பாடுகள் போன்றவற்றைம், அவனது சுற்றுப் புறச் சூழ்நிலை, அவனது இனம், இலக்கியப் படைப்பாளன் நாட்டுப்புறத்தவனா? நகர்ப் புறத்தவனா? அவனது இலக்கியப் பயிற்சி, ஆழ்ந்த புலமை, அவனது பொருளாதார நிலை, இலக்கியத்தைப் படைப்பதற்கு அவனுக்கு ஏற்பட்ட சமுதாய உந்தல்கள், சமுதாய உணர்வுகள், சமுதாயத்தில் அவன் பெற்றுள்ள மதிப்பு போன்றவற்றையும் அணுகி ஆராய்ந்து உண்மை காண வழிகோலுவது சமுதாய ஆய்வு நோக்காகும். மேலும் ஒரு குறிப்பிட்ட இலக்கியம் சமுதாயத்தில் பெற்றுள்ள மதிப்பு, காலப் போக்கில் ஏற்படும் சமுதாய மாற்றங்கள் போன்ற வற்றையும் ஆராயலாம். உதாரணமாக,

"பாரதிதாசன் பாடல்களில் சமுதாய உணர்வு"

"சங்ககாலச் சமுதாய நிலை"

"சிலப்பதிகாரம் காட்டும் தமிழர் சமுதாயம்"

என்றவாறு ஆய்வுத் தலைப்புகளை தேர்ந்தெடுப்போமே யானால் சமுதாய நோக்குமுறை ஆய்வு பெரிதும் உறுதுணையாக அமைகின்றது.

**சமுதாய ஆய்வு நோக்கின் பயன்கள்**

1. இலக்கியப் படைப்பாளனுக்கும், சமுதாயத்திற்கும் உள்ள நெருங்கிய பிணைப்பை அறிய இத்தகைய நோக்குமுறை ஆய்வு பயன்படுகிறது.
2. இலக்கியம் முகிழ்த்த காலத்துச் சமுதாய ஏற்றத் தாழ்வுகளை அறிய இவ்வாய்வு நோக்குப் பயன் படுகிறது.
3. ஒரு சமுதாயத்தின் வரலாறு, இலக்கிய வரலாறு, கலை வரலாறு போன்றவற்றையும் இலக்கிய மரபு மாற்றங்களையும் அறிந்து கொள்ளச் சமுதாய ஆய்வு நோக்கு வழிவகுக்கிறது.

## மொழியியல் நோக்கு

இப்பொழுது வளர்ந்துவரும் ஆய்வு நோக்குகளில் மொழியியல் ஆய்வு நோக்குத் துரித வளர்ச்சி பெற்று வருகின்றது. இலக்கியத்தை ஆய்வதற்கான மொழியியல் துறைகளும் தோன்றியுள்ளன. இலக்கியக்கலை என்பது மொழியின் அடிப்படையில் அமைகின்றது. ஒரு குறிப்பிட்ட இலக்கியத்தை ஆராய விழைவோர் அவ்விலக்கியம் தோன்றிய மொழியை—மொழியின் தன்மைகளை நன்கு அறிந்திருத்தல் வேண்டும். அப்போதுதான் மொழியியல் ஆய்வு நோக்கு மூலமாக இலக்கியத்தை அணுகி நுணுகி ஆராய முடியும். எனவே மொழியியல் ஆய்வு நோக்கு இலக்கிய ஆய்வுக்குப் பெரிதும் தேவைப்படுகின்றது. உதாரணமாக,

"The Language of Narrinai"
"Paripatal a Lingulstic study"
"Language of Tirukkural"

"Tagmemic grammar of Tirukkural with text translation and Index"

"தமிழ்க் கல்வெட்டுக்களில் மொழி நடை."

என்றவாறு ஆய்வுத் தலைப்புகள் அமைந்தால், மொழியியல் ஆய்வு நோக்கு மூலமாக ஆராய வேண்டும்.

மேற்கூறப்பட்ட அறுவகை ஆய்வு நோக்குகளும் இலக்கியத்துறை ஆய்வாளருக்குப் பெரிதும் பயன்படுவனவாகும். எடுத்துக்கொண்ட ஆய்வுத் தலைப்புக்களுக்கேற்ப ஆய்வு நோக்குகள் அமைகின்றன. உதாரணமாக,

"Social Philosophy of Kamban"

என்ற தலைப்பில் ஆய்வு நிகழ்த்துவோருக்கு சமுதாய ஆய்வு நோக்கும், தத்துவ ஆய்வு நோக்கும், உளவியல் ஆய்வு நோக்கும் பெரிதும் பயன்படக்கூடும். இலக்கிய ஆய்வுத்துறையில் உளவியல் ஆய்வு நோக்கும், தத்துவ ஆய்வு நோக்கும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. பக்தி இலக்கியங்களை ஆராய்வோருக்கு இவ்விருவகை ஆய்வு நோக்குகளும் இன்றியமையாதனவாகின்றன. ஒரு குறிப்பிட்ட இலக்கியத்தை ஆழ்ந்து (Critical Study) முழுமையாக ஆயவோருக்கு அறுவகை ஆய்வு நோக்குகளும் துணைநிற்பனவாகும்.

இலக்கிய ஆய்வு நோக்குகள் பலவகைப்பட்டாலும் அவற்றின் நோக்கம் முழுமையும் ஒருமித்து நிற்கக் காணலாம். அதுவே இலக்கியத் திறன் காண்டலும், பயன் துய்த்தலுமாகும். இலக்கியம் என்பது பல்கலைக் களஞ்சியமாகும். எம்முறை ஆய்வு நோக்குகளிலும் ஆய்வதற்கான கருத்துக் கருவூலங்களை இலக்கியம் பெற்றிருக்க வேண்டும். அதுவே சிறந்த இலக்கியமாகும். கால ஓட்டத்தைக் கடந்து நிற்பதுமாகும். திருக்குறள், சிலப்பதிகாரம் போன்ற இலக்கியங்[illegible] பல்கலைக் கருவூலங்களாக இலங்குகின்றன[illegible]

நோக்கில் இலக்கியத்தை ஆராய்ந்தாலும் அவரவர் விரும்பிய வண்ணம் நிறைவு தருவதே உன்னத இலக்கியமாகும். ஆய்வாளர்கள் தேர்வு செய்யும் தலைப்புகளுக்கேற்ப ஆய்வு நோக்குகளை •கையாள வேண்டும். இலக்கிய ஆய்வு மேன்மேலும் வளர்ச்சியடைய மேற்கூறிய அறுவகை ஆய்வு நோக்குகளும் இன்றியமையாதனவாகும.

---

# பயன்பட்ட நூல்கள்

## தமிழ்


1. சுப்பிரமணியன், ச. வே, (பதி.) — ஆராய்ச்சி நெறி முறைகள், உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, 1875
2. பெரிய கருப்பன், இராம, இலக்குமணன், எம். எஸ். — ஆய்வியல் அறிமுகம் மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1977
3. முத்துச்சண்முகன், வேங்கடராமன், சு,, — ஆய்வுக்கட்டுரை எழுதும்முறை, சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, 1976
4. விசுவநாதன் ஈ. சா. — ஆய்வு நெறி முறைகள் க்ரியா, சென்னை, 1976


## ஆங்கிலம்


1. Almack, J C. — *Research end Thesis Writingt* Houghton Mifflin Company, Boston, 1952.
2. Anderson & others — *Thesis and Assignmen, writing,* Wiley Eastern private Limited, New Delhi, 1970
3. Berry, Ralph., — *How to Write a Research Paper*, Pergamon, Oxford, 1966.

4. Bajpai, S. R., *Methods of Social Survey and Research,* Kitab Ghar, Kanpur, 1660.

5. Cohen, Liliam, S., *Statistical Methods for Social Scientists: An Introduction,* Prentice Hall of India' New Delhi, 1963.

6. Davenport, C. B. *Statistical Methods,* John Wiley & Sons, New York, 1904.

7. Frankel, M. R., *Inference from Survey Samples : An Empirical Investi gation,* Investigation of social Research, Ann Arbor, 1972.

8. Gerald Hursh - Cesar, Prodipto Roy, (Ed) *Third World survey : Survey Research in Developing Nations,* The Macmillan Company of India Ltd., New Delhi, 1976.

9. Gopal, M. H., *An Introduction to Research Procedure inSocialscience* Asia Publising House, Bombay, 1964

10. Goode, W. J., and Hatt, P. P., *Methods in Social Research,* McGraw Hill Book co., New York, 1953.

11. I verson, M. R., *The Research Paper Simplified,* prentice Hall of India private Ltd, New Delhi, 1979.

12. Kaufmann, C., *Methodology of Social Science*, OxfordUniversity press, New York, 1944.

13. Kurien, C. T., (Ed.) *Guide to Research in Economics*, Sangam publishers, Madras, 1973

14. Neelamegham, A, *Presentation of Ideas in Technical Writting* Vikas, Delhi, 1975.

15. Oppenhair, A. N., *Questionnairn: Desigh Attitude, Measurement, Basic Book*, New York, 1966

16. Parsons, G. J., *Thesis and project work*, George Allen and Unwin Ltd., London, 1976

17. Parten, M., *Savings, polls and Samplet practical procedures*, Haper & Row, New York, 1950

18. Robbert Ross, *Research An Introduction*, Barnes & noble Books, Inc. New York, 1974

19. Stefan Nowak, *Mathodology of Sociological Research*, D Reidal Publishing Company, Boston U. S. A. 1971

19. Schluter, W C. *How to do Research work* Prentice Hall. Inc., New York, 1959

20. Vincent, J. M. *Historical Research*, Hanns Holt & co., New York, 1911.

21. Wilson, E & Bright Jr., *Introduction to Scientific Research,* Mcgraw Hill, New York, 1952.

22. Young, Pauline, V., *Scientific Social Surveys and Research,* Prentice Hall, New York, 1959.

# கலைச்சொல் அகரநிரல்

| | |
|---|---|
| 1. அஞ்சல் வழி வினாவரிசை 34 | Postal Questionnaire |
| 2. அடிக்குறிப்பு 59, 86 | Foot Note |
| 3. அட்டவணைகள் 131 | Tables |
| 4. அதிகாரத்துவப் பேட்டி 26, 27 | Authoritative Interview |
| 5. அழுத்தம் 36 | Intense |
| 6. அளவை மாதிரியமைப்பு 34 | Quota Sampling |
| 7. ஆய்வு மதிப்புரைகள் 21 | Reviews of Research |
| 8. ஆய்வு மூல உண்மைக் கூறுகள் 29 | Research Sources |
| 9. ஆய்வுரை எழுதுதல் 23 | Thesis writing |
| 10. ஆய்வேட்டின் உடற்பகுதி 58 | The Body of the Thesis |
| 11. ஆழ்வாய்வு 149 | Critical Study |
| 12. ஆவணப் பேட்டி 26, 27 | Documentary Interview |
| 13. இடைவெளி 131 | Space |
| 14. இரண்டாம் நிலை மூல உண்மைக்கூறுகள் 14 | Secondary Sources |
| 15. இரண்டாவது படி எழுதுதல் 125 | Writting the Second Draft |
| 16. இறுதிப்படியைச் சோதித்துப்பார்த்தல் 127 | Checking the Final Draft |
| 17. உணர்ச்சி 143 | Emotion |
| 18. உண்மைக் கூறு பகுத்தல் 34 | Analysis of Data |

